# 1. பனைமரத்து முனியாண்டி சாமியும், வன்னியம்பட்டி பச்சையப்பனும்

---------------------

நஞ்சைக் காட்டின் கிழக்குக் குண்டில், வரத்து வாய்க்காலை ஒட்டி, வாமடை பிரிந்து செல்லும் இடத்தில் கரையான் பூச்சிகள் புற்று வைத்த மேட்டில், நிலத்தின் ஈரம் சொத, சொதவென மாறாது நின்றிருக்கும் இடத்தில், சம்பந்தா சம்பந்தமில்லாமல் தனித்து நின்றது அந்த ஒற்றைப் பனைமரம்.

சாமி வயக்காடு என்றால் யாருக்கும் அடையாளம் சொல்லத் தெரியாது. இனாம் நாச்சியார்கோவில் கிராமத்தின் வடக்கு விளிம்பில், சோசியம் சமுத்திரபாண்டி காட்டுக்கு நேர் வடக்கே ஒற்றைப் பனைமரம் உள்ள காடு தான் சாமி காடு என்று ஊருக்குப் புதிதாய் வருபவருக்கு அடையாளம் காட்டப்பட்டது. யார் நட்டார்களோ யாருக்குத் தெரியும்?! பனைமரத்தையெல்லாம் யாரும் இளம் கன்னு வெச்சு நடுகிற வழக்கமில்லை. எங்கேயோ எப்போதோ முளைத்த ஒரு பனை நெத்து நிலத்தில் ஊன்றி, வளர்ந்து, பெரியகுளம் கண்மாய்த் தண்ணீர் வாய்க்கால் வழிந்தோடி, நெல்லுக்குப் பாய்ந்த போது, இந்தப் பனை நெத்துக்கும் பொசிந்து, பயிர் பச்சைக்கு இட்ட எரு, உரம் எல்லாவற்றிலும் தன் பங்கையும் வாங்கிக் கொண்டு, ஓங்கி உலகளந்து, விஸ்வரூபம் எடுத்து, கரு கருவென நின்றது. அம்மரத்தின் பின்புலத்தில் நீண்ட நெடிய மேற்குத்தொடர்ச்சி மலைத் தொடர்.

எத்தனை வருசம் அங்கே நின்றதோ, யாரறிவார்?! ஒற்றை மரம் என்பதால் அதில் சூல் கொள்ளவில்லை. மரத்தின் நேர் கீழே கரையான் புற்றுக்கள் இருந்ததால், மரம் ஏற எவருக்கும் தோதுப்படவில்லை. ஒருவரும் சீண்டாமலே சும்மனே கிடந்தது அம்மரம். பனைமரம் உணர்வின்றி, மரத்துப் போய்க் கிடந்தது.

வெளியூருக்கு ஒரு சொந்த சோலியாகப் போன மாசாணன், ஒரு நாள் நாச்சியார்கோவில் கிராமத்துக்குத் திரும்ப ரொம்ப நாழியாகிவிட்டது. பின்னிரவில் இரண்டாம் ஜாமத்தில் அவன் சாமி வயக்காட்டைக் கடந்தபோது, ஈரமான மேல் காத்து சுழித்து, சுழித்து அடித்தது. பனைமரத்தின் ஓலைகள் காற்றில் படபடத்துச் சலசலத்தன. மார்கழி மாச வெம்பா பனி, மரத்தின் உச்சியில் முட்டிக் கொண்டு நின்றது. அருகில் அவனது ஊர் மயான

நிசப்தத்தில் இருந்து. ஓலைச் சலசலப்பில், மங்கிய நட்சத்திரங்களின் வெளிச்சத்தில், பனைமர உச்சியில் பனி வெம்பாவைப் பார்த்த மாசாணனுக்கு அடி வயிறு பிசைந்தது.

ஒரு கணம் பனைமர உச்சியை ஏறிட்டுப் பார்த்தபோது, நாப்பது அடி உயரத்தில், உச்சியில் சலவை வேட்டி போன்ற வெள்ளை நிறத்தில் யாரோ கையசைத்துக் கூப்பிடுவது போல பிரமை தட்டியது. ஊர் அடைந்து, வீட்டுக்குப் போய் படுத்த மாசாணனுக்கு மறுநாள் காலையே கடும் சுரம் கண்டது.

ஸ்ரீவில்லிபுத்தூர் தர்மாஸ்பத்திரியில் பன்னிரண்டு நாட்கள் படுத்த படுக்கையாய்க் கிடந்த அவன் உயிர் பிழைக்க வேண்டி, அவனது ஒரே பொஞ்சாதி கிருட்டிணம்மாள், ஈரேழு பதினாலு லோகத்திலுமுள்ள தேவர்கள், கின்னர, கிம்புருடர்கள், யட்ச, கந்தவர்களில் தொடங்கி, ஊருக்கு வெளியே ‘ஊர் விலக்கம்’ செய்து தள்ளி வைக்கப்பட்ட இருளப்பசாமி, சொறிமுத்து அய்யனார், கலுங்கலடி கருப்பசாமி, தன்தலைவெட்டி அய்யனார், நைனார் சாமி முதலான பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட எல்லா சாமிகளுக்கும் படையல் வைப்பதாய் பயபக்தியில் உள்ளம் உருகி நேர்ந்து கொண்டு, முந்தானையில் எட்டணாக்காசை முடிந்து கொண்டு நேர்ச்சை செய்ததால், நோய்வாய்ப்பட்ட மாசாணன், கவர்மெண்ட் வைத்தியர்களின் அஜாக்கிரதை, நர்சுகளின் அலட்சியம், தரமில்லாத தண்ணி மருந்து, ஈ, கொசு, மூட்டைப்பூச்சி மொய்க்கும் ஆஸ்பத்திரி வார்டின் சகல தொற்று நோய்களுக்கும் உயிர் தப்பித்து, சொஸ்தமாகிப் பிழைத்துத் தன் சொந்த ஊருக்கே வந்து சேர்ந்தான்.

நாலு நாட்கள் கறிச்சோறு ருசி கண்டவனுக்கு, மீண்டும் அந்த ஒற்றைப் பனைமரம் ஞாபகத்துக்கு வரவே, அன்றைக்கே ஒரு பெரிய கனத்த நாலு இன்ச் ஆணி, சுத்தியல் சகிதம், அந்தப் பனைமரத்துக்குப் போய், அதன் கீழே ஒரு ஆள் உயரத்தில், மரத்தின் இடுப்பில் ‘நட்டாங் நட்டாங்’ கென்று ஆணியை அடித்து, ஒரு செவ்வந்திப்பூ மாலையைத் தொங்க விட்டு, மூப்பனார் கடையில் சகாய விலைக்கு வாங்கிய நூல் இழை வெள்ளைச் சவுக்கத் துண்டை அந்தப் பனைமரத்தின் இடுப்பில் கட்டி, பயபக்தியாய்ச் சாமி கும்பிட்டு விட்டுப் போய் விட்டான்.

மாசாணனை நோயில் வீழ்த்தியது பனைமரத்துச் சாமி தான் என்று ஊராருக்குப் பிரசங்கம் செய்தது சாட்சாத் அவனது பத்தினி கிருட்டிணம்மாள் தான். பருத்திக் காட்டில் சொளை பறிக்கப் போனவள் பனைமரத்தில் ஒரு முனியாண்டி சாமி புதிதாய் குடியேறி இருப்பதாகவும் (வாடகை எதுவும் தராத பட்சத்திலும்) வரப்பிரசாத தெய்வமென்றும், நள்ளிரவில் மர உச்சியில் நின்று, வெள்ளை வேட்டி கட்டி நட்டுவாங்கமில்லாமல் கூத்து நடனம் ஆடுவதாகவும் புஞ்சைக் காட்டில் கயிறு திரித்தாள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த வனத்தாய், பேச்சி மற்றும் ஆவாராயி ஆகிய கிழவிகள், அன்றைக்குப் பொழுது சாயும் நேரம் ஊர் திரும்பும்போது, அந்தச் சின்ன கிராமத்தின் நாலா மூலைகளிலும் தமுக்கு, தண்டோரா எதுவுமில்லாமல் இந்த முனியாண்டி சாமியின் புதிய வீட்டு கிருகப்பிரவேசம் பற்றிப் பொதுக்கூட்டப் பிரச்சாரம் நடத்தி விட்டார்கள்.

அடுத்த பங்குனியில், ஊரில் பெரிய காளியம்மன் கோவிலில் பொங்கல் விழா நடந்த போது, மேற்படி பனைமரத்தில் குடியேறிய முனியாண்டிக்கும் ஒரு வாழை இலையில் சுடச்சுட சக்கரைப் பொங்கல் கிடைத்தது. கூடவே ஒரு விள்ளல் ஆட்டுக்கறியும்.

காத்தாடி மகன் பரமசிவன் டிரைவிங் லைசன்ஸ் வாங்க இராஜபாளையம் ஆபீசுக்குப் புறப்பட்டுப் போகும் போது,

‘நல்லபடியா லைசன்ஸ் கெடச்சா உனக்கு ருசியா படையல் வைக்கிறேன்’ என்று முனியாண்டியிடம் சத்தியம் பண்ணி விட்டுத்தான் போனான். இவனுடைய தலையில் இருந்த வேப்பெண்ணை நாத்தத்தைத் தாங்க முடியாமல் அந்த மோட்டார் ஆபீசர்,

‘நீ ஒண்ணும் வண்டி ஓட்டிக் காட்ட வேணாம். இந்தா, பிடி லைசன்ஸ்’ என்று எடுத்த எடுப்பில் ஓட்டுநர் லைசன்ஸை அவனிடம் கொடுத்தார்.

தான் லைசன்ஸ் பெற்றதற்குக் காரணம் தன்னுடைய தலையில் உள்ள மகிமை நிறைந்த வேப்பெண்ணை தான் என்பதை சற்றும் உணராமல், அந்தக் காரியத்தைச் ‘செஞ்சு முடிச்சது’ அந்த பனைமரத்து முனியாண்டி சாமி தான் என்று, அந்த ஈடு இணையில்லா கௌரவத்தை அந்த முனியாண்டிக்கே தந்த காத்தாடி மகன் பரமசிவன், செண்பகத்தோப்புக்குப் போய், ஒரு முழுக் குப்பி பனங்கள்ளை இறக்கிக் கொண்டு வந்து, முனியாண்டிக்குப் படையல் வைத்து, தொட்டுக் கொள்ள வறுத்த கருவாடும்,

சேவல் மார்க் சுருட்டு ஒரு பாக்கெட்டும் வைத்து விளக்கேற்றி சாமி கும்பிட்டான்.

மறுநாள் காலை, அங்கு போய்ப் பார்த்தவன், கண்ணாடிக் குப்பி காலியாகக் கிடப்பதையும், கருவாடு தின்னப்பட்டிருப்பதையும், சுருட்டு புகைக்கப்பட்டிருப்பதையும் கண்டு, அஞ்சி நடுநடுங்கி, மரத்தின் முன்னே நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கி, முனியாண்டி சாமி தன் கள்ளு, கறி படையலை ஏற்றுக் கொண்டதை மம்சாபுரம் வரை போய்ப் பிரஸ்தாபித்தான்.

மேலும் ரெண்டு பேர், புதுசு புதுசான சிவப்புத் துண்டுகளை வாங்கி வந்து முனியாண்டியின் இடுப்பில் கட்டி விட, சாமிக்கு சாந்நித்யம் கூடியது. விபூதி, சந்தனம், குங்குமம், சூடம், சாம்பிராணி, ஊதுவத்தி, கதம்ப மாலை, பன்னீர் பாட்டில் சகிதம் பூஜை காண ஆரம்பித்தார் முனியாண்டி. உப்புப் பொரி, பட்டாணி, சர்க்கரை, அவல் என வாரா வாரம் வசதியாய்ச் சாப்பிட ஆரம்பித்தார் சாமி. பி.ஆர்.சி. கோவிந்தன் நாலு செங்கல்லைக் கொண்டு வந்து ஒரு விளக்கு மாடம் வைக்க, இருளில் கிடந்த முனியாண்டி, கிளியாஞ்சட்டி எண்ணை விளக்கில் மினுமினுத்தார்.

பால் மாடு கந்தசாமி வாடிக்கைப் பால் ஊற்றப் போகும் இடங்களிளெல்லாம் மேலும் முனியாண்டி புகழ் பரப்பி வைக்க, இப்போது சாமியின் கீர்த்தி லட்சுமியாபுரம், துலுக்கன்குளம், பொட்டல்பட்டி, பெருமாள்தேவன்பட்டி மற்றும் குடிநீர், மின்சாரம், ரேசன் அரிசி கிடைக்காத பட்டி, தொட்டி கிராமங்களிளெல்லாம் பரவ ஆரம்பித்தது.

இவை போதாதென்று, உள்ளூர்க் கவிராயர் ஒருவர், முனியாண்டி துதி, முனியாண்டி அகவல், முனியாண்டி கவசம், முனியாண்டி தோத்திரம் என்று வாய்க்கு வந்ததையெல்லாம் பாடி வைத்து, புத்தகமாக வெளியிட, முனியாண்டிக்கு இப்போது ஒரே மவுசுதான்.

தளவாய்புரம் கிராமம் செந்தில்குமார் ஒவ்வொரு ஊராகப் போய், அங்குள்ள கோவில் தெய்வங்களைப் பார்த்து வணங்கி, கதைகள் சேகரித்து, தல புராணத் தகவல்களைத் திரட்டி, பாடல்கள் எழுதி, கேசட் தயார் செய்து ஊர் ஊராய்ப் போய் விற்பவன். எந்த ஊரில் எந்தத் திருவிழா நடந்தாலும் அவன் கடை திறந்து விற்பனை செய்வதைப் பார்க்கலாம்.

பனைமர முனியாண்டியின் புகழ் செந்தில்குமாரின் செவிகளை எட்டியது தான் தாமதம். உடனே, பெட்டி படுக்கையுடன் பஸ் ஏறி, நேரே அந்த கிராமத்திற்கே வந்து விட்டான். வந்ததும் வராததுமாய் சோலைமலைச்சாமி வயக்காட்டுக்குப் போய், அவரிடம் முனியாண்டிச் சாமியின் தல வரலாற்றைக் கேட்க, சோலைமலைச் சாமி மௌனமாய் ஒரு நமட்டுச் சிரிப்பு சிரித்தார். அந்தச் சிரிப்பில் ஒரு நையாண்டி இருந்தது.

பின்னே என்ன ‘பனைமரம் தன் வரலாறு கூறல்’ என்று ஒன்பதாம் வகுப்பு தமிழ்ப்பாடத்தில் உள்ள கட்டுரையைப் போல, முனியாண்டிச் சாமிக்கு என்ன தல புராணம் சொல்ல முடியும்?! சுயம்புவாய் முளைத்த ஒரு பனைநெத்துக்கு தல புராணம் என்ன சொல்வது என்று தலையைச் சொறிந்து கொண்டார்.

சோலைமலைச் சாமி. தன் வயக்காட்டுப் பருவக்காரன் அய்யாக்கண்ணுவைக் கைகாட்ட, அய்யாக்கண்ணு உடனே பெரிய ஜபர்தஸ்தாய், கனத்த பீடிகையுடன் ஆரம்பித்து, சுயம்புவாய் பனைமரம் உதித்த, ஜனித்த, முளைத்த, வளர்ந்த, விரிந்த வரலாற்றைச் சொல்லி, சாமியின் திருவிளையாடல்களை ஒவ்வொன்றாய்க் கதை போல விவரிக்க, யாவற்றையும் கேட்டுக் கொண்ட செந்தில்குமார், உடல் புல்லரித்துப் போய், ஒரு முழு நூறு ரூபாய் நோட்டை எடுத்து அய்யாக்கண்ணுவிடம் திணித்து விட்டு, தன் சிறிய டேப் ரிக்கார்டரில் அந்த சரித்திரம் அத்தனையையும் பதிந்து கொண்டு சென்னைக்கு ரயிலேறிப் போனான்.

மூன்று மாதங்கள் கழித்து, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவில் கடைத் தெருவில், ராஜகோபால் கேசட் கடைப் பக்கம் யதேச்சையாய்ப் போன சோலைமலைச் சாமி, ‘இனாம் நாச்சியார்கோவில் பனைமரத்து முனியாண்டி மகாத்மியம் - பக்திப் பாடல் திரட்டு – பாடியவர் – அச்சந்தவிழ்த்தான் நிறைமருதன் - இசை – கோடம்பாக்கம் பத்மராஜன் - விலை ரூபாய் 60/-என்ற ஆடியோ கேசட் புத்தம் புதிய மோஸ்தரில் கண்ணாடி ஷோகேஸ் உள்ளே மினுமினுப்பதைப் பார்த்தார்.

முனியாண்டிக்கு தினசரி நல்ல சாப்பாடு கிடைத்தது. சுடச்சுட நெய்ப் பொங்கல், புதுத் தேங்காய், அவல், பொரி, பொறித்த சேவல் கறி, நெய் விட்ட மாவிளக்கு மாவு, நாட்டு வாழைப்பழம், சர்க்கரை என இவையெல்லாம் போதாதென்று தினசரி இரவில் கள்ளுக் குப்பி ஒன்று, சுருட்டு ஒரு பாக்கெட். தினசரி முனியாண்டி சுருட்டுப் புகைக்காமல் தூங்குவதே இல்லை.

குறைவில்லாத ஊட்டமான தீனி தின்ற முனியாண்டி நெடிது வளர்ந்தார். கீழ் வயிறு உப்பியது. உப்பிய வயிற்றில் மேலும் ரெண்டு ஆணி அடிக்கப்பட்டு, ஒன்றில் சாமியின் பெயர், விலாசம் சொல்லும் பலகை ஒன்று தொங்க விடப்பட்டது. மற்றொன்றில், சிறிய மரத் தொட்டில் கட்டப்பட்டது.

புழு, பூச்சி வயிற்றில் பிறக்காத பெண்களுக்கு முனியாண்டி, குழந்தை பாக்கியம் தர ஆரம்பித்தார். சாமியாடி ரணவீரன் வருஷந்தோறும் பொங்கல் விழாவில், அரிவாள் எடுத்து ஆடிக் கொண்டே, தீப்பந்தங்கள் சூழ முனியாண்டி சாமிக்கு நேர்த்தி செலுத்தினான். அப்போது மஞ்சள் சேலை கட்டிய சுமங்கலிப் பெண்கள் ரணவீரன் தலையில் ஒரு குடம் மஞ்சத்தண்ணி ஊத்தி, அவன் காலைத் தொட்டு வணங்கினால் அடுத்த வருஷமே குழந்தை பாக்கியம் நிச்சயம் என அந்த வட்டாரமே நம்பியது. ரணவீரன் பனைமர முனியாண்டிக்கு துபாஷி வேலை பார்க்க ஆரம்பித்தான்.

இப்போதெல்லாம் முனியாண்டிக்கு பக்தர்களுடன் பேச நேரம் இருப்பதே இல்லை. சாப்பிடவும், தூங்கவும் நேரம் சரியாக இருக்கிறது. போதாக்குறைக்கு தினசரி கள், சுருட்டு வேறு. மயக்கத்தில் உறங்கிக் கிடப்பதே வேலையாகிப் போனது. சாமியாடிகள் மட்டும் முனியாண்டிக்குப் பக்கத்தில் போய், அவன் காதில் ஏதாவது பேசலாம். கேட்டதும், அவன் காற்றில் தலையைச் சிலுப்பிக் கொள்வான் அத்தோடு சரி, "புரிந்து கொண்டேன்" என்பது போல, அத்தோடு சாமியாடி இடத்தைக் காலி பண்ணிவிட வேண்டும். இல்லையென்றால், முனியாண்டிக்கு ரௌத்திரம் பொங்கிவிடும். "போடா, போடா. போய்ச் சோலியப்பாருலே!" என்பான் முனியாண்டி. ரவ்வும், பகலும் செண்பகத்தோப்புக் கள்ளில் மப்பு ஏறிக்கிடந்தான் முனியாண்டி. (மன்னிக்கவும் : கிடந்தார் முனியாண்டி).

கண் விழிப்பதே உச்சிப்பகல் பொழுதில் தான். கண்விழித்து எழுந்ததும், கீழே கிடக்கும் சூடான படையல் சோற்றை ஒரு பிடி பிடித்து விட்டு ஒரு உறக்கம். சாயங்காலம் கண் விழித்ததும், அவலும், வாழைப்பழமும், சர்க்கரைப் பொங்கலும் தயாராய் இருக்கும். ஒரு கட்டு கட்டி விட்டு, பிறகு மறுபடி நல்ல உறக்கம். இரவில் முதல் ஜாமத்தில் கண் விழித்ததும், சிமிட்டா விளக்கு வெளிச்சத்தில் ரெண்டு பெரிய குப்பி பனங்கள்ளையும், வறுத்த கோழிகளையும் ஒரே முழுங்கில் முழுங்கிவிட்டு, ஒரு சுருட்டு பற்ற வைத்துக் கொண்டு, ஒரு நீண்ட கொட்டாவி விடுவார். அத்தோடு சரி. உறக்கம் கண்ணைக் கட்டிக் கொண்டு வரும். உறக்கத்தில்

யாரும் எழுப்பினால் சாமிக்குப் பிடிக்காது. சில நேரம் உருமி மேளச் சத்தம் கேட்கும். கண்விழித்து "ஏண்டா, கோட்டி புடிச்ச பயலுகளா! எவன்டா அது சத்தம் கொடுக்கறது? தூங்க விடுலே நிம்மதியா!" என்று ஒரு அதட்டுப் போடுவார். தலை காற்றில் ஆடும். அத்தோடு சரி. நிசப்தம் வந்து விடும். ஒரு பயலாவது வாயைத் திறந்தால் தானே?!

தூக்கம் என்பது பரம சுகம். உண்பதும், உறங்குவதும், பிறகு மீண்டும் உண்பதும், உறங்குவதும்... அடடா... அதை என்னவென்று சொல்வது?! இதை அனுபவித்த முனியாண்டி, "இதுவே போதும், வேற எதுவும் எனக்கு வேணாம் " என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

முனியாண்டியின் சாந்நித்யம், அருள் மற்றும் அவரது மகிமை யாவும் பரம்பரை ஆதீன மட கர்த்தாக்களின் காதுகளில் விழுந்து அவர்களும்,

"இதென்ன வம்பாப் போச்சு! நாம தான் சுகவாசியா காலம் தள்ளறோம். நம்மள விட வேற ஆளு ஒருத்தன் இப்படி வாழுறானா?! ச்சே, இது தோதுப்படாது. இத இப்படியே விடப்படாது" என்று மனசுக்குள் பொரும ஆரம்பித்தார்கள்.

ஆனால், இந்தப் பொருமல், பொறாமை எல்லாம் முனியாண்டி காதுகளுக்கு எட்டவே இல்லை. முகவூருக்குத் தெற்கே நூறு மைல் விஸ்தீரணத்தில் முனியாண்டி பேர் காற்றில் ஒலிக்காத ஊரே இல்லை.

வீரசாம்பான்,இனாம் நாச்சியார்கோவில் கிராமத்தில் மூணு தலைமுறைகளைப் பார்த்தவன். ஒரு பெரிய தகர உண்டியல் செய்து, பூட்டு போட்டு, அதைக் கனத்த சங்கிலியால் கட்டி, சாமி அருகில் உள்ள சிமிண்டு மேடையில் பதித்து வைத்தான். நாலே நாளில் அந்தத் தகர உண்டியல் புள்ளத்தாச்சி பொம்பள போல முழுசாய் நிறைஞ்சு கிடந்தது.

ஒரு சனிக்கிழமை இரவில், ஊரில் யாம சாம வேளையில் எல்லோரும் அசந்து உறங்கிக் கிடந்த போது, தகர உண்டியல் உடைக்கப்பட்டது. மொத்த சில்லரைக் காசுகளும், கை கொள்ளாமல் நெறஞ்சு கிடந்த சலவைத்தாள் நோட்டுக்களும் களவாடப்பட்டன. பாவம், முனியாண்டி! அவன் கள்ளு குடித்த மப்பில் துங்கிக் கொண்டிருந்தான்.

உண்டியலின் பூட்டு உடைக்கப்பட்ட சத்தம் கூட அவன் காதுகளில் கேட்கவில்லை.

மறுநாள், அதிகாலை ஊர்க்காவல் பரமுத்தேவன் தான், சாமி உண்டியல் களவுபோன விஷயத்தை ஊருக்குச் சொன்னான்.

ஊரே திரண்டு அங்கு கோவிலுக்கு வந்தது. பின்பு, காவல்துறை வந்தது, பின்பு, ஸ்ரீவில்லிபுத்தூர் நகர் பிரமுகர்கள் வந்தனர். பின்பு, அறநிலையத்துறை அதிகாரிகள் ஜீப்பில் வந்தனர். "உண்டியல் வெச்ச கோவில் இது தான?! இனிமே இது அறநிலையத்துறைக்குச் சொந்தம். அதாவது அரசாங்கத்துக்குச் சொந்தம்". அப்படின்னு ஒரு அறிக்கை எழுதிக் கொண்டு வந்து வாசித்துக் காட்டினார். பேண்ட்-சூட் போட்ட நடுத்தர வயசு ஆபீசர்.

மறு வாரம், செவ்வகமான ஒரு பலகை மேற்படி "பனைமர முனியாண்டி சுவாமி திருக்கோவில் அறநிலையத்துறைக்குச் சொந்தமானது" என்று சொன்னது. அத்துடன் செயல் அதிகாரியும், தக்காரும் நியமிக்கப்பட்டனர். தகர உண்டியல் வைக்கப்பட்ட அதே இடத்தில், சதுரமான சிமெண்ட் தளம் போடப்பட்டு, ஒரு புதிய இரும்பு உண்டியல் வைக்கப்பட்டது. அத்துடன், ஒரு பூசாரியும் கோவிலுக்கு நியமனம் செய்யப்பட்டார். ஆறு கால பூஜையெல்லாம் ஆகம விதிகளின்படி. அது ஐம்பொன் சாமிகளுக்கு மட்டும். முனியாண்டி சாமிக்கு ஒரு கால பூஜையே போதும் என பூசாரி தருக்கனி மகன் மாயா நிர்ணயம் செய்தார். அதற்குக் கோவிலின் செயல் அலுவலர் சோ. முத்துக்கருப்பனும் எழுத்துப் பூர்வமாய் ஒப்புதல் தந்தார்.

சாமிக்கு அர்ச்சனை செய்ய டிக்கெட் ரூ. 3.00, சாமிக்கு படையல் வைக்க கட்டணம் ரூ. 10.00, அபிசேகம் பண்ண ரூ. 20, தீச்சட்டி எடுக்க ரூ. 25, காது குத்த ரூ. 50, சாமி முன்னால் கல்யாண நிச்சயதார்த்தம் பண்ண ரூ. 100.00, திருமணம் செய்ய ரூ. 250.00 என்ற நீளமான பட்டியலை ஒரு பெரிய சைஸ் போர்டில் எழுதி முனியாண்டிக்கு முன்பாக நிற்க வைத்து விட்டார்கள்.

இப்போதெல்லாம் பனைமர முனியாண்டியைப் பார்ப்பதே அரிது. டிக்கெட் எடுத்தால் தான் தெய்வ தரிசனம். அதுவும் வெள்ளி, சனிக்கிழமைகளில் கியூ வரிசை மைல் நீளத்திற்கு நிற்கும். கோவில் அறங்காவலர் ஒரே பிசி. அவர் காட்டில் ஒரே பண மழை.

"சாமி இல்லை. பூதம் இல்லை" என்று மேடையில் முழங்கும் பகுத்தறிவுவாதிகள், நாத்திகவாதிகள் கூட ரகசியமாக வந்து இரவு நேரங்களில், யாருக்கும் தெரியாமல் சாமி கும்பிட்டு விட்டுப் போனதாகத் தகவல். முனியாண்டி ரொம்ப பாவம். தன் கண் முன்னே, எவனெவனோ, பண வசூல் செய்து கொண்டு செழிப்பாக இருப்பதைப் பார்க்கப் பார்க்க பொறாமையாகத்தான் இருந்தது. ஒரே மாத வசூலில் நிர்வாக அதிகாரி முத்துக்கருப்பன் பைக் வாங்கி விட்டார் என்றால் என்னவென்று சொல்வது ?!

தன்னை முன் நிறுத்தி வசூல் பண்ணிக் கொண்டிருந்த பேன்ட்-சூட் ஆபீசர்களைப் பார்க்கப் பார்க்க முனியாண்டிக்கு கோபம், கோபமாய் வந்தது. வாரா வாரம், ஒரு அதிகாரி ஜீப்பில் வந்து முனியாண்டியைப் பார்த்து விட்டுப் போனார். வக்கீல்கள் தங்கள் கேஸ் ஜெயிக்க வேண்டும் என்று சாமிக்கு வேண்டுதல் செய்தார்கள். தினசரி வேளாவேளைக்குப் படையல்தான். ஆனால், எடுத்துச் சாப்பிட முடியாது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டலைன்னு முனியாண்டிக்கு ஒரே வயித்தெரிச்சல். இப்படிப் பல மாதங்கள் சுழன்று ஓடின.

ஒரு சித்திரை மாதத்தில், கோடை வெப்பம் கொளுத்திக் கொண்டிருந்தது. சூரியன் பூமியை உக்கிரமாய் தகித்துக் கொண்டிருந்தான். நெருப்பு ஆறு , வீதியில் பெருக்கெடுத்து அனல் பறக்க ஓடியது. வயல்வெளிகளில் வெப்பம் உப்புப் பொரித்துக் கிடந்தது. மாலை மயங்கியதும் சூரியன் மேல்திசையில் வீழ்ந்ததும், கருக்கலில் பூமியில் இருள் படந்தது.

பக்கத்துக் கேரளாவிலிருந்து வந்த கருமேகம், மேற்குத்தொடர்ச்சி மலையின் மேல் கருக்கொண்டு திரண்டு நின்றது. நீர் முட்டி நின்ற கருமேகக் கூட்டம் பூமி பார்த்தது.

"சட் சடா, சட் சடா" வென திடீரென இடி ஓசை கொட்டியது. பெரும் அதிர்ச்சியோடு, மின்னல் வானத்தில் கிழ மேற்காக ஒரு வெட்டு வெட்டி, எங்கும் வெளிச்சத்தைச் சிதற அடித்தது. ஒரு சில நிமிடங்கள் இடைவெளி. ரங்கநாதபுரம் - கம்மாப்பட்டியில் உள்ள நிறைமடி பசுமாடு, யாதவன் வைத்துள்ள குடத்தில் பால் பொழிந்தது போல, மேகம் முழு வீச்சில் தன்னுள்ளே கருக்கட்டி நின்ற தண்ணீர் அத்தனையையும் அப்படியே நிலத்தில் கவிழ்த்தது. வெடித்துப் பாளம் பாளமாய்க் கிடந்த நஞ்சைக்காடு,

புஞ்சைக் காட்டு வெளிகளில், பூமி அந்த நீரை அப்படியே "தா தா" வென்று உள் வாங்கிக் கொண்டது. எங்கும் ஊழிக்கால நீரின் பிரவாகம்.

மீண்டும் ஒரு இடி மின்னல் வெட்டியது. இப்போது அது நேர் செங்குத்தாய் மலையிலிருந்து பூமி நோக்கி இறங்கியது. வெடித்த அந்த இடி மின்னல் வீழ்ந்த இடத்தில், பனைமரத்து முனியாண்டி நேராய் நின்று கொண்டு இரவிலும் அருள் பாலித்துக் கொண்டிருந்தார். வெட்டிய இடி அவர் தலையில் செங்குத்தாய் இறங்க, அது அவரது தலையை அப்படியே அய்யனாரின் அரிவாள் வீசியதைப் போல வெட்டியெடுத்து பூமியில் தூர வீசியது. ஒரு பெரிய கொத்து பனை ஓலைகளும், பாளைகளும் கீழே தெறித்து விழுந்து நாலா பக்கமும் சிதறின. கொட்டிப் பெய்த மழை முனியாண்டியின் வெற்று முண்டமான உடம்பை நனைத்துக் கொண்டே இருந்தது. இரவு முழுக்கப் பெய்த அடை மழை பெரியகுளம் கண்மாயை நிரப்பி விட்டது.

காலைக்கடன் முடிக்க தரிசுப் பக்கம் ஒதுங்கிய மாசாணன் தான் முதன்முதலாய், முனியாண்டி தலை வெட்டப்பட்டு, மொட்டையாய் நிற்பதைப் பார்த்து, பதைபதைத்து ஊருக்குச் சொன்னவன். ஊரே பதறியடித்து ஓடி வந்தது. ஒட்டுமொத்தமாய் இனாம் நாச்சியார்கோவில் கிராமமும், இனாம் கரிசல்குளம் கிராமமும் ஒன்று திரண்டு முனியாண்டியைச் சுற்றி நின்று, கண்களில் ஒப்பாரி வடிய பார்த்தபடி நின்றது. ரெண்டு கிராமங்களும் ஏற்கெனவே, வெட்டு, குத்துப் பகையில் இருந்தவை. முனியாண்டியின் துஷ்டி நிகழ்ச்சி ரெண்டு கிராமத்து சனங்களை ஒன்று சேர்த்தது. பெண்கள் மூக்குச் சிந்தி ஒப்பாரி வைத்தனர். ஜீப்பில் வந்தார் செயல் அலுவலர் முத்துக்கருப்பன். காமதேனுவாய் வருமானம் தந்து கொண்டிருந்த முனியாண்டியின் மரணத்திற்கு உண்மையிலேயே அவர் வருந்தினார்.

வெட்டப்பட்ட முனியாண்டி, மொட்டையாய் முண்டமாய் நின்றார். தலையில்லா முனியாண்டி சாமியைக் கும்பிட யாரும் வரவில்லை. வசூலும் இல்லை.

இரவில் அங்கு நடமாட்டம் குறைந்து, கோவிலில் இருந்த டியூப்லைட்டுகள் அகற்றப்பட்டன. உண்டியலைக் கழட்டி எடுத்துக் கொண்டு வீட்டுக்குக் கொண்டு போய் விட்டார் முத்துக்கருப்பன். அகலமான செவ்வக போர்டுகள் எல்லாம் போன இடம் தெரியவில்லை. இரவில் அந்த முனியாண்டி, பேய் ரூபத்தில் வெள்ளை உருவமாய், தலை விரித்து

வயல்வெளிகளில் சுற்றித்திரிவதாக, ஊர்க்கிழவி பேச்சி தான் கதை அளந்து கொண்டு இருந்தாள்.

சோலைமலைச்சாமி, மொட்டை முனியாண்டியை என்ன செய்யலாம் என்று யோசித்தார். விற்று விடலாமா என்றால், பேய் பிடித்த முனியாண்டியை வெட்டுவதற்கு சுற்று வட்டாரத்தில் எவனும் முன்வரவில்லை.

"அதுல வேற ஒரு பொம்பள முனி குடியிருக்குது சாமி. அந்த பொம்பள முனி தான் செத்துப்போன முனியாண்டிக்கு முத சம்சாரம். அதனால அதப்போயி வெட்டுறது பாவம் சாமி " என்று மரவெட்டிகள் பயந்தார்கள்.

களை எடுக்க வரும் பெண்களிடம், பனைமர முனியாண்டியின் விதவை மனைவியின் கதையைச் சொல்லி அவர்கள் அச்செய்தியை தேவனின் சுவிசேஷ நற்செய்தி போல எங்கும் பரப்பினார்கள். ஒருவனும் கரு முண்டமாய் நின்ற முனியாண்டியைத் தொட்டு அகற்ற வரவில்லை.

"சவம் கிடக்குது. விட்டுத் தள்ளுங்க!" என்று சோலைமலைச்சாமி தன் வகை ஆட்களிடம் சொல்லிவிட்டு பிறகு அவரும் அதை மறந்தே போனார்.

இனாம் நாச்சியார்கோவிலுக்குத் தெற்கே வன்னியம்பட்டியில் விதவிதமான தொழில்கள் செய்து பிழைக்கும் ஆட்களில் பச்சையப்பனும் ஒருவர். வயசாளி. வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டையில் மெலிந்த தேகம். இடுங்கிய கண்கள், சிவந்த முகம். எழுபதைத் தாண்டிய பச்சையப்பனுக்கு ஒரே விரோதி அரசாங்கத்தின் வனத்துறைதான். "வீட்டுக்கு வீடு ஒரு மரம் வெக்கணும்னு கவர்மென்ட் சொன்னா, வெச்ச மரத்தையெல்லாம் எவன் வெட்டுறது? அது பாட்டுக்கு எங்க பார்த்தாலும் மரம் வளர்ந்து கிடக்குது. பாக்க நல்லாவே இல்லையே!" என்பார். அவருடன் இருந்து மரம் வெட்டித் தர ஐந்து சம்பளக் கூலியாட்கள் எப்போதும் உண்டு. அவர்களில் ஒருவன் சந்தனக்காளை.

இனாம் நாச்சியார்கோவிலில், பார்க்க, வளப்பமாய் இருந்த ரெண்டு பெண்களிடம் தொடுப்பு வைத்திருந்தான் சந்தனக்காளை. ஒரு இரவில், அந்தப் பெண்கள் பேச்சு வாக்கில் மேற்படி பனைமர முனியாண்டி சாமியின் பிரபாவத்தை அவனிடம் அவிழ்த்து விட்டனர். கதையைக் கேட்ட சந்தனக்காளைக்கு முனியாண்டி மீது பச்சாத்தாபம் ஏற்பட்டது. நெடுநாளாய்

ஒரு சவம் நின்று கொண்டிருக்குதே. நம்ம பச்சையப்பன் கிட்ட சொன்னா என்ன. அண்ணாச்சி மனசு வெச்சா அந்த மேற்குத் தொடர்ச்சி மலையைக்கூட பேர்த்து எடுத்துடுவாரே என்று அங்கலாய்த்தான்.

உடனே சைக்கிள் மிதித்துப் போய், தன் முதலாளி பச்சையப்பனைப் பார்த்த சந்தனக்காளை மேற்படி சவ சரீரத்தைத் தொட்டுத் தூக்க எவனுக்கும் தைரியம் வரவில்லை என்ற உபரித் தகவலையும் வயசாளியிடம் ஒப்புவித்தான்.

முனியாண்டி பாகவதம் கேட்ட பச்சையப்பன், ஜல்லிக்கட்டு காளையை அடக்கக் களத்தில் குதிக்கும் இளந்தாரியைப் போலத் துள்ளிக்குதித்தார். மறுநாளே, சோலைமலை சாமிக்குத் தகவல் சொல்லி அனுப்பிவிட்டு, தன் வகையறா ஆட்கள் நாலு பேருடன் நேரடியாக ஸ்தலத்திற்குப் போன பச்சையப்பன், கீழே நின்று கொண்டு முனியாண்டியைத் தலையிலிருந்து கால் வரையும், காலிலிருந்து தலை வரையிலும் பார்த்துவிட்டு, தலையை ஆட்டி ஒப்புதல் கொடுக்க, கூரிய தீட்டப்பட்ட கோடாரிகள் முனியாண்டியின் இடுப்பில் கடுமையாய் இறங்க ஆரம்பித்தன.

மரம் வெட்டிய ஆட்கள் தெலுங்கு பேசிக்கொண்டே "ஓங்கி தெங்குறா" "தெங்குறா" என்று வாயில் கறுவிக்கொண்டே கோடாரிகளை முழுவீச்சில் கீழே இறங்கினார்கள்.

ஆரம்ப வெட்டுக்களில் முனியாண்டி அசைந்து கொடுக்கவில்லை. இருபது வெட்டு போட்டதும் சில்லு சில்லாய், செதில் செதிலாய் முனியாண்டி பெயர்ந்து விழ ஆரம்பித்தான். கோடாரி வீச்சு அதிகமாக ஆக, ஆக முனியாண்டியின் இடுப்பு பிளக்க ஆரம்பித்தது. அது மெலிந்து கொண்டே வந்தது.

கோடாரிக்காரர்கள் நல்ல முரட்டு ஆட்கள். கள்ளுக் குடித்த மப்பில் தான் கோடாரியை வீசினார்கள்.

"ம்ம்ஹூம்ம்.. ம்ம்ஹூம்ம்" என்ற இளைப்புப் பெருமூச்சுடன் கோடாரி வெட்டு விழுந்து கொண்டே இருந்தது. ஊரடியில் இருக்கும் பெட்டிக்கடையில் இருந்து சோடா, பீடி, புகையிலை வந்தது. புகையிலையை வாயில் அதக்கிக் கொண்டு வேலையாட்கள் கோடாரி வீச ஆரம்பித்த பொழுது, சூரியன்

அவர்களின் தலைக்கு மேலே நேர் உச்சியில் மிக உஷ்ணமாய் எரிந்து கொண்டிருந்தான்.

வீச்சு இப்போது குறைந்து, முனியாண்டியின் இடுப்பு, நூலிழையில் நின்ற போது , பச்சையப்பன் வெட்டுவதை நிறுத்தச் சொன்னார்.

முனியாண்டியின் மார்புக்கு மேலே, மூன்று அங்குல கனத்தில் நல்ல கொச்சைக் கயிறு இறுக்கிக் கட்டப்பட்டு, அதன் மறுமுனை தூரத்தில் நின்ற வாதராட்சி மரத்தில் கட்டப்பட்டது. இன்னொரு கொச்சைக் கயிறை எடுத்து மீண்டும் முனியாண்டி மார்பில் கட்டி, அதன் மறு முனையைப் பிடித்துக் கொண்டு தயாராய் நான்கு பேர் நின்றனர்.

இப்போது மீண்டும் கோடாரி வெட்டு விழத் தொடங்கியது. பழைய வீச்சு இல்லை. பதமாகத் தான் வீசினார்கள். பத்தாவது நிமிஷத்தில் முனியாண்டி இடுப்பு வலி தாங்க முடியாமல் அலறத் தொடங்கினார். "ணார்... ணர்ர்... ணர்ர்" என்று ஒரு ஈனஸ்வரத்தில் வேதனையில் முனகும் சத்தம்.

கோடாரி பிடித்தவன் வீச்சை நிறுத்திவிட்டு, எல்லோரிடமும் "கவனமா தள்ளி நில்லுங்க" என்று சொல்லிவிட்டு மேலும் வீசத்தொடங்கினான்.

இப்போதும் "ணார்... ணர்ர்... ணர்ர்" அவஸ்தையில் முனகினார் முனியாண்டி. "இந்தா உன் சோலி முடிஞ்சது" என்று இறுதியாய் ஒரு வீச்சு வீசினான் ஒரு இளந்தாரி.

தான் நின்ற இடத்தில் அப்படியே ஒரு ஆட்டம் சுழன்று ஆடினார் முனியாண்டி. இடுப்பு முறிந்தது. பிறகு, பெரிய மரண ஓலத்துடன் தெற்குப் பக்கம் சாய்ந்து விழுந்தார் முனியாண்டி.

நெல் அறுவடை முடிந்து, தாள் துருத்திக் கொண்டு நிற்கும் வயலில், நாப்பது அடி உயரத்தில் ஒரு சவ சரீரம் நெடுஞ்சாண் கிடையாகக் கிடந்தது. உயரமான முனியாண்டி என்பதால், உடலை ரெண்டாக வெட்டி எடுத்துப் போகலாம் என முடிவு செய்தார் பச்சையப்பன். அதன்படி மேலும் ஒரு மணி நேரத்தில், கோடாரி வீச்சுக்களில் இரண்டு சரீரங்களாய் துண்டுபட்டுக் கிடந்தார் முனியாண்டி.

சவத்தை டிராக்டரில் ஏற்றிக் கொண்டிருந்த போது, பச்சையப்பன்,

''நல்ல வைரம் பாய்ஞ்ச கட்டை. வீட்டு உத்தரம் செய்ய தோதுப்படும். நேரா வன்னியம்பட்டிக்கு வண்டியை விடுப்பா. என் வீட்டுல இது ரெண்டையும் இறக்கிரு. ஆசாரிய வெச்சு சோத்தையெல்லாம் சுரண்டி எடுத்துட்டு, நல்லா இழைச்சு, உத்தரமாய்ச் செஞ்சுற வேண்டியதுதான். என் மகா தனி வீடு கட்டிக் கொடுங்கப்பான்னு ரொம்ப நாளா அனத்திக்கிட்டு இருக்கா ''

என்றபடி சக கூலியாட்களுடன் டிராக்டரிலேயே வன்னியம்பட்டிக்குப் புறப்பட்டார்.

சோசியம் சமுத்திரபாண்டி காட்டைத் தாண்டி , வரப்பில் ஏறி இறங்கிய போது, டிராக்டர் குலுங்கியது. பின்னே உள்ள டிரெய்லரில் இரண்டு பேராய்க் கிடந்த முனியாண்டி, இனிமேல் செத்த பின்னும் அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக்கப் போகும் தன் தலைவிதியை எண்ணி நொந்தபடியே தன் நீண்ட பயணத்தைத் தொடங்கினான்.

--------------------

## 2. ‘ஒலவ மரம் வீழ்த்திய காதை’

‘இந்த மரம் மட்டும் தேக்கா இருந்திச்சி, இப்ப லட்ச ரூவா தேறும்’ என்றான் அய்யாக்கண்ணு, தன் இடது கையால் தட்டியபடி. அவனது இடது கை தட்டப்பட்ட இடத்தில் ஒரு உயர்ந்த ஒலவ மரம் நின்றது. உயர்ந்து, பருத்து, கிளை பரப்பி, எங்கும் விரிந்து, கோடி இலைகளுடன் பச்சைப் பசேலென்று , கண்ணால் பார்க்கும் போதே போய்க் கட்டிக் கொள்ளத் தோன்றும் அழகு.

‘கட்டிக்கொள்ள’ என்றால் ஒரு ஆள் போய் அதைக் கட்டிக் கொள்ள முடியாது. மதுரை திருமலை நாயக்கர் மகால் தூணைப் போல மூணு பேர் சேர்ந்து பிடித்தால் தான் அந்த ஒலவ மரமத்தைச் சேர்த்து அணைக்க முடியும். முரட்டுக் கிராதகி. பார்வையின் கவனக்குறைவில் தப்பி வளர்ந்து, திருமாலைப் போல நெடிது நின்றது ஒலவ மரம்.

ஏதோ ஒரு பறவை, ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில், ஏதோ ஒரு பழமென்று நினைத்து ஒரு இலவ மரத்தைக் குறி வைத்துக் கொத்த, அதில் இருந்த முதிர்ந்த விதைகளை எடுத்துத் தன் வாயில் சப்பி, சுவைத்து, அதன் மேலே இருந்த பஞ்சை மட்டும் விழுங்கி விட்டு, விதையை வாயில் வைத்து, நக்கியும், ருசித்தும், பின் அதன் ருசியில்லாத் தன்மையை உணர்ந்து, பறக்கும் போதே கீழே துப்பி விட, விதை விழுந்த இடம், நீர் வரத்து செழும்பாய் இருந்த வரப்பு அருகே.

பம்புசெட் ரூமுக்குப் பின்புறம், வாழைக்கன்றுகள் தார் ஈன்றிய ஈர நிலத்தில், யதேச்சையாய் இந்த ஒலவ விதையும் வீழ்ந்திருக்க வேண்டும். காலப் பெருவெள்ளத்தில் ஒரு சிறு துளிப் பொழுதாகிய வருடக்கணக்கில், அது நன்கு வேர் ஊன்றி, வளர்ந்து வீரியத்துடன் மேல் எழுந்து இருக்க வேண்டும்.

வளர்ச்சியில் நல்ல பருமன். பெருத்த வயிறும், பரந்த கால்களும்.

நல்ல உரமேறி பெருத்துக் கிடந்த அந்த மரம், ஊரான் சொத்தைச் சுரண்டும் களவாணியைப் போல, கரும்புக் காட்டுக்கு போடப்பட்ட யூரியா, டி.ஏ.பி., சாம்பல், உரங்களால், மேலும் உரம் பெற்று மேலும் உயர்ந்தது. எப்போதும்

நீர்ச் சகதியில் ஊறி, ஊறி அதில் கனம் ஏறியது. சோலைமலைச் சாமியின் கண்களில் தப்பி, எப்படியோ வளர்ந்து எழும்பி விட்டது.

அந்த மரத்தின் உச்சியில், நாலு திசைகளிலும் நாலு கிளைகள் நீண்டு, விரிந்து, குடை பிடித்து நிழல் தந்தன. அந்த நிழல் குளுமை தந்தது. குளுமையான நிழலில், கரும்புக்குப் பட்டம் கட்ட வந்த கம்மாப்பட்டி ஆட்கள் தூக்குவாளியுடன் உட்கார்ந்து கஞ்சி குடித்தார்கள். அசதி வந்தால் படுத்து தூங்கினார்கள். குத்த வெச்சு உட்கார்ந்து ஊர்க்கதை பேசினார்கள். எப்போதும் அந்த மரத்தின் கீழ் ஏதாவது ஒண்ணு நடந்து கொண்டிருந்தது.

ஓங்கிய மரம், வெயில் பட்டு மினுமினுத்தது. தூரத்தில் இருந்து பார்த்த போது, ஆண்டாள் கோவில் ஆடித்தேர் போல் தெரிந்தது. பார்த்ததும் கை கூப்பி சாமி எனக் கும்பிடத் தோன்றியது.

தை மாசந் தோறும் மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து, பிற்பகல் பொழுதுகளில் குளுந்த மேல் காத்து வீசிய போது, காற்றில் ஒலவங்காய்கள் ஆடும். பார்க்க ஏதோ வெள்ளரிக் காய்களைத் தோரணம் கட்டியது போல, ஏராளமாய்க் காய்கள் காற்றில் படபடவென கீழே விழும். வெள்ளரிக் காயென்றால் எடுத்துத் தின்னலாம். இது ஒலவங்காய். நல்ல நீளத்தில் உள்ள காயை வாயில் வைத்து ருசிக்க முடியாது. ஒரே கசப்பாய்க் கசக்கும்.

விழும் காய்களை அய்யாக்கண்ணு பொறுக்கி எடுத்து, பம்புசெட் ரூமில் உள்ள உரச் சாக்குகளில் சேர்த்து வைப்பான். காய்ந்த ஒலவங்காய்கள் காற்றாய் இருக்கும். மூடை மூடையாய்ச் சேர்ந்த காய்களை உடைத்து, தோடு நீக்கி, விதை நீக்கிப் பஞ்செடுத்து, வெண்ணை மாதிரி உள்ள மென் பஞ்சைத் தனியாய்ச் சேர்த்து வைப்பது அம்மாவின் வழக்கம். பிரித்தெடுத்த பஞ்சை, துணி உறைகளில் அடைத்து, தலகாணியாய் தைத்து வைப்பாள் அம்மா.

சில நேரங்களில், ஏராளமான காய்களைச் சேர்த்து மூடைகளில் கட்டி, சைக்கிளில் கொண்டு போய் கோட்டைத்தலைவாசல் வேலாயுதம் பிள்ளை வீட்டிற்குக் கொண்டு போய் அவர் வீட்டு முற்றத்தில் கொட்டுவதும் உண்டு. பிள்ளையின் வீட்டு முற்றத்தில் நல்ல வெய்யில் வெளிச்சத்தில், மொத்தச் சாக்குகளும் அவிழ்த்துக் கொட்டப்பட, அதில் உள்ள காய்கள் மீது பிள்ளை ஒரு பார்வை வீசுவார். பார்வையே காய்களின் தரத்தை எடை போட்டு விடும். பிறகு வேட்டியை வழித்துக் கட்டிக் கொண்டு, கீழே உள்ள காய்களை

ஒரே குவியலாக்கி, உள்ளங்கையை குவித்து, ஒவ்வொரு காயையும் படுக்கை வசத்தில் வைத்துத் தட்ட ஆரம்பிப்பார். நல்ல சொளை என்றால், அது ஒருபுறம். சொத்தைக் காயென்றால் அது ஒருபுறம். சொத்தைக் காய்களை கழித்து விடுவார். ஒரே தட்டு தட்டுவதில், இளம் பழுப்பு நிறத்தில் உள்ள காய் பிளந்து, உள்ளே உள்ள வெள்ளை பஞ்சு வெளியே தலை நீட்டுவதைப் பார்க்க ஏதோ அதிசயமாய் இருக்கும்.

நல்ல சொளைகள் உள்ள காய்களின் குவியலை ஒரு பார்வையிடுவார். பிறகு ரெவ்வெண்டாய் காய்களை எடுத்து எண்ண ஆரம்பிப்பார். ஒரு கைக்கு ரெண்டு காய்கள் வீதம் எண்ணி முடித்து, ஒரு காய்க்கு எட்டணா வீதம் கணக்குப் பண்ணி, வேட்டி மறைவில் உள்ள துணி மடிப்புப் பை எடுத்து, அதன் கயிற்றை அவிழ்த்து, எட்டாய் மடித்த ரூவாய்த் தாள்களை எடுத்துப் பணத்தை எண்ணித் தருவார். ஒரே நாளில் பணம் வசூலானால் அது அதிர்ஷ்டம் தான். சில நேரங்களில், ஒரு வாரம் ஆகும். வீட்டுக்குப் பணம் வசூல் பண்ணப் போனால் பிள்ளை வீட்டில் இருக்க மாட்டார். வீட்டில் உள்ள பெண்கள், ‘அவர் சேத்தூர் போயிருக்காரு’ என்பார்கள் . பணம் வசூலாகாமலே போய்விடுமோ என்று மனசுக்குள் பயம் வரும். எதிர்பார்த்துப் போனால் பணம் வசூலாகாது.

காத்தடி காலத்தில்,காய்கள் உதிர்ந்து மரம் மொட்டையாகி நிற்கும். ஊர்க்குடிமகன் ராமசாமியின் கூரிய கத்தரிக்கோலில் மாட்டிய தலை மொட்டையாகி, முடி இல்லாமல் ஆள் வெளியே வருவது போல. பார்க்கப் பரிதாபமாய் இருக்கும். மரத்தின் மேல் பச்சாத்தாபம் வரும்.

‘ஒரு மூணு மாசம் பொறு. முடி முளைக்கும். இலை துளிர்க்கும்’ என்று ஆறுதல் சொல்லத் தோன்றும்.

அய்யாக்கண்ணுவுக்கு ஒலவ மரம் ஒரு காமதேனு மாதிரி. வருஷத்துக்கு நாலு தடவை காய் உதிர்க்கும் அட்சய பாத்திரம். காட்டில் ஆள் இல்லாத போது, காய்களைச் சேகரித்து வைப்பான். வீட்டுக்கு எடுத்துப் போய் உடைத்துப் பஞ்செடுப்பான். சில நேரங்களில் வேலாயுதம் பிள்ளையிடமே விற்று விடுவான். சோலைமலைச் சாமியிடம் சொல்வதில்லை.

எலக்டிரிக் கம்பத்தின் அருகே நின்ற மரம், மின்சார வயர்களுக்கு மேலே கிளை விரித்து நின்றது தான் பிரச்னை. நாலு இழை அலுமினியக் கம்பிகள் இரண்டு கரண்டு கம்பங்களுக்கிடையே தொங்கிக் கொண்டிருந்தன. கரண்டு கம்பிக்கு மேலே தொங்கி நின்ற மரக்கிளைகள் சில நேரம் கரண்டு கம்பிகளில் உரசி, உரசி தீப்பிடித்து எரிந்தன. அய்யாக்கண்ணு அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால், வயர்மேன் மாரிமுத்து அதைப் பார்த்து விட்டுக் கவலை தெரிவித்தான். நீட்டிக் கொண்டிருக்கும் எல்லாக் கொப்புகளையும் தறிச்சு விடுமாறு அய்யாக்கண்ணுவிடம் சொன்னான்.

மரத்தில் ஏற அய்யாக்கண்ணுவுக்கு தோதுப்படவில்லை. மரம் ஏற முடியாதபடிக்கு நெய்யாய் வழுக்கியது. கிளைகள் ஏறி நிற்க முடியாதபடி அடர்ந்து கிடந்தன.

- 'முடிஞ்சா நீயே மேல ஏறி, வேண்டாத கொப்புகளை வெட்டிக்கய்யா' என்று மாரிமுத்துவிடம் சொன்னான் அய்யாக்கண்ணு.

- 'மரம் வயர் மேல கிடந்ததுன்னா, மிஷினை வெச்சு தறிச்சு விட்டுரலாம். ஆனா, அந்த வெட்டுற மிஷின் எனக்கு ஆபீசுல கொடுக்கல. நீயே ஒரு நாளைக்கு அதுல மேல ஏறி, ஒரு நாலஞ்சு கொப்புகளை முறிச்சி விட்டுரு' என்றான் மாரிமுத்து.

ஒலவ மரம் கரண்டு வயர்களை அணைத்தபடி கிடந்தது. அய்யாக்கண்ணு மரம் ஏற பயந்தான். 'பச்சை மரத்துல கரண்டு பாயும். ஷாக்கடிச்சு நான் சாகவா' என்றான்.

மாரிமுத்து, 'எனக்கு இந்த மரம் ஏற வசதிப்படாது. ஆனா ஒண்ணு சொல்லிட்டேன். இந்த ஒலவமரம் பெரிய ஆபத்து. வயர் மேல இது விழுந்துச்சுன்னா, கரண்டு கம்பமே சாய்ஞ்சுடும். உனக்கு மேக்குட்டு உள்ள காடு இஞ்சினியர் பரமசிவம் காடு. உடனே அங்கேயும் கரண்டு போயிடும். இந்த வரிசைல இருக்கறதுல மொத்தமா ஒரு பத்து கிணத்துல கரண்டு வராது. பாத்துக்கோ.

மரம் வெட்டுறதுன்னா நீயே வெட்டக் கூடாது. வெட்டுனா கரண்டு கம்பம் மேல மரம் சாய்ஞ்சுடும். அப்படி கரண்டு கம்பம் சாய்ஞ்சா பத்தாயிரம் ரூபா அபராதம் போடுவோம்'.

அதனால ஒழுங்கு மரியாதையா நீயே நாளைக்கு ஆபீசுக்கு வந்து ஜே.ஈ. சாரைப் பாரு. அவரு சொல்றபடி கேளு' என்று கறாராய்ச் சொல்லிவிட்டு, தன் இடுப்புக் கயிறு, உறை சகிதம் போய் விட்டான்.

மறுநாள் காலை எட்டு மணிக்கு படிக்காசுவைத்தான்பட்டி ஜே.ஈ. ஆபீசரைப் போய்ப் பார்த்தான் அய்யாக்கண்ணு. 'வயர் மேல விழாம மரம் வெட்டணுமா? (அப்படி வா வழிக்கு! ) மரம் வெட்டறதுக்கு ஆட்களை ரெடி பண்ணிட்டு எங்க ஆபீசுக்கு தகவல் சொல்லி அனுப்பு. நாங்க எங்க வயர்மேன் நாலு பேரை அனுப்புவோம். அவங்க கரண்ட் கம்பத்து மேல ஏறி, பீஸ் கேரியரை எல்லாம் பிடுங்கிட்டு, எல்லா வயர்களையும் கழட்டி விட்டுட்டு சரின்னு சொல்லுவாங்க. அப்ப, உங்காளுங்கள விட்டு மரத்தை வேகமா வெட்டச் சொல்லணும். மரத்தை வெட்டிச் சாய்ச்சதும், மறுபடி கரண்ட் கம்பத்துல ஏறி, வயர்களை எல்லாம் எங்க வயர்மேன்கள் மாட்டுவாங்க. அவங்களுக்கு சாப்பாடு, போக்குவரத்து மற்ற எல்லாச் செலவுகளும் உங்க பொறுப்பு. ஒரு ரெண்டாயிரம் ரூபாயை ரெடி பண்ணி வெச்சா, எங்க வயர்மேன்களை அனுப்பி வெச்சுருவேன். புரிஞ்சுதா?' ஜே.ஈ. பேசிக் கொண்டே போனார்.

அய்யாக்கண்ணுவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அந்த ஓலவ மரம் கூட அவ்வளவு விலை போகுமா என்று சந்தேகமே. அவனும் எல்லாருக்கும் காத்துவாக்கில் சேதி சொல்லியனுப்பினான். மம்சாபுரம் ஆள் ஒருத்தன் கோடாரியுடன் வந்து மரத்தை வெட்டப் பார்த்தான். பிறகு மரக்கொப்புகளுக்குக் கீழே இருந்த கரண்ட் வயர்களைப் பார்த்து விட்டு 'இதோ வர்றேன்' என்று சொல்லி விட்டுப் போனவன் தான். பிறகு வரவே இல்லை.

அய்யாக்கண்ணு திகைத்துப் போனான். ஒவ்வொரு தடவையும் வயர்மேன் மாரிமுத்து பம்புசெட் பக்கம் வரும்போதெல்லாம், அந்த ஓலவ மரத்தை ஏதோ பரம்பரை எதிரியைப் பார்ப்பது போலப் பார்வையிட்டான்.

'யோவ் அய்யாக்கண்ணு! முதல்ல அந்த ஓலவ மரத்தை வெட்டிக் குளோஸ் பண்ணுற வழியைப் பாரு! அது எசகு பிசகா கரண்ட் வயர் மேல தொங்கிட்டிருக்கு ஆமா. பெரிய ஆபீசர் இதையெல்லாம் ரொம்ப உன்னிப்பா பாக்குறாரு' என்றான் மாரிமுத்து.

- ‘நான் எல்லாப் பக்கமும் தகவல் சொல்லி விட்டுட்டேன்பா. நீ கவலைய விடு. இந்தப் பங்குனிக்குள்ள மரத்தைச் சாய்ச்சுருவேன்’ அய்யாக்கண்ணு சவால் விட்டான்.

எல்லா மர வெட்டிகளும் சோலைமலைச்சாமி வயக்காட்டுக்கு வருவதும், ஒலவ மரத்தைப் பெண் பார்ப்பதும், பிறகு ‘பெண் பிடிக்கவில்லை. என்னால் இவ்வளவு பெரிய ஓங்கு தாங்கான ஆளையெல்லாம் பெண்டாள முடியாது’ என்று சம்பந்தம் பேச மறுப்பதும், தொடர் வாடிக்கையாகிப் போனது. பச்சைப் பசேலென்று இருந்தும், பார்க்க கண்ணுக்கு நிறைவாய் இருந்தும் கரண்ட் கம்பி தோஷம் இருந்ததால், ஒலவமரம் முதிர்கன்னியாகவே இருந்தது.

ஒரு நல்ல வேனல் கால பின்மாலைப் பொழுதில், அய்யாக்கண்ணு, களைவெட்டும் பெண்களுடன் சேர்ந்து கிழக்கே போடு கரும்புக்கு களை வெட்டிக் கொண்டிருந்தான்.

- ‘இங்க யாருங்கய்யா அய்யாக்கண்ணுங்கறது’ என்ற குரல் கேட்டது.

அய்யாக்கண்ணு கரும்புப் பட்டத்திலிருந்து சரேலென மம்பட்டியுடன் வெளிப்பட்டான்.

- ‘என்னய்யா, என்ன வேணும்? நான் தான் அய்யாக்கண்ணு ’.

- ‘உன் காட்டுல ஒலவ மரம் ஒண்ணு நிக்குதுன்னு சொன்னாங்க. அத வெட்டி எடுத்துட்டுப் போக வந்தேன்’.

யாராவது பக்கத்தில் நின்று மூச்சை இழுத்து விட்டால், கீழே விழுந்து விடுபவன் போல வந்த ஆள் இருந்தான். வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டையில் மீசையில்லாமல் மழுக்கென்ற முகம்.

- ‘எந்த ஊரு?’

- ‘வன்னியம்பட்டி’

- ‘பேரு?’

-‘பச்சையப்பன்’

- ‘என்ன ஆளுங்க?’

- ‘……….’

- ‘வாங்க என்னோட’

- வந்த வயசாளியைக் கூட்டிக் கொண்டு, வரப்பு மிதித்து நடந்து சென்று, பம்பு செட் ரூமுக்குப் பின்புறம் கன்னி கழியாமல் நின்ற முதிர்கன்னி ஓலவ மரத்தைக் காட்டினான் அய்யாக்கண்ணு.

பச்சையப்பன் மரத்தின் மொத்த உயரத்தையும் பார்வையால் அளந்தான். பிறகு மரத்தின் இடுப்புப் பக்கம் வந்து அதைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தான். மரம் உளுத்துப் போனதா என்று தட்டிப் பார்த்தான். பிறகு முகவாய்க்கட்டையைத் தேய்த்தபடியே சிந்தனையில் ஆழ்ந்தான்.

- ‘சரி, விலையைச் சொல்லு’

- ‘நீங்களே ஆரம்பிங்க’

- ‘நீ உத்தேசமா உன் எதிர்பார்ப்பைச் சொல்லுய்யா’

- ‘……….’

- ‘……….’

பேரம் ஆரம்பமாகியது. நீண்டு கொண்டே போன பேரம், ‘இந்தா இழு. விடாதே பிடி’ங்கற கதையாக ‘உனக்காச்சு எனக்காச்சு’ ன்னு கை மேல துண்டு போட்டு பேரம் நடத்தாத குறைதான்.

- பச்சையப்பன் தன்னுடைய பழைய மரம் வெட்டிய வீரப் பிரதாபங்களை ஒவ்வொன்றாய் அவிழ்த்துவிட ஆரம்பித்தான். அய்யாக்கண்ணு தனக்குத் தெரிந்த விறகு வியாபாரிகளைப் பற்றி கதை அளந்தான்.

பேரம் பேச ஆரம்பித்தவர்கள், வியாபாரம் செஞ்ச கதை, சம்சாரி கதைகள், வெள்ளாமை செஞ்ச கதைகள், யார் யாரோடு தொடுப்பு வைத்திருக்கிறார்கள் போன்ற சரித்திரச் சம்பவங்களையெல்லாம் நினைவுபடுத்தத் தொடங்கினர்.

ஆட்டுக்கு இணை ஆடு சேர்ந்த கதையாக, இவ்விருவரும் பேச்சு சுவாரசியத்தில் ஒன்றி விட்டனர். பழங்கதைகள் பேசிக் கொண்டே வந்த பச்சையப்பன், அந்த ஒலவ மரத்திற்கு அருகிலேயே தெக்குப் பக்கமாய் நின்ற, வானத்தைத் தொட்ட தென்னை மரத்தைத் தொட்டுப் பார்த்தான். அதை ரெண்டு தட்டு தட்டியவன்.

- 'சரியான வைரம் பாய்ஞ்ச தென்னை மரம் போல. இது நல்ல வலு உள்ளது' என்றான்.

- 'அது நாப்பது வருஷத்து மரம். வயசாளி. எங்க சோலைமலைச்சாமியோட அம்மா நட்டது'. என்று தென்னை மரத்தின் பூர்வ கதையைச் சொன்னான் அய்யாக்கண்ணு.

- இழைச்சு தூண் செய்யவோ, உத்தரத்துக்கோ ஆகாது. ஆனா, கட்டிடத்துக்கு சாரம் கட்ட லாயக்கு' என்றான் பச்சையப்பன்.

- அந்தத் தென்னை மரத்தை நான் விக்க முடியாது. எங்க சோலைமலைச்சாமி விக்கச் சொன்னது ஒலவ மரத்தை மட்டும் தான்'.

கருக்கலில், மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்புறம் சூரியன் வீழ்ந்த போது தான் பச்சையப்பன் துண்டை உதறி விட்டு எழுந்தான். இறுதியில் ஒலவ மரம், தென்னை மரம் இரண்டுக்குமாகச் சேர்த்து மூவாயிரத்து ஐநூறு என்று முடிவானது. அய்யாக்கண்ணு தலையை ஆட்டி சம்மதம் தெரிவித்தான்.

பச்சையப்பன் தன் வேட்டியை உயர்த்தி, பட்டை நாடா அண்டர்வேரில் மடித்து வைக்கப்பட்டிருந்த கத்தை நோட்டுகளில் ஒரு நூறு ரூபாயை எடுத்து அய்யாக்கண்ணுவின் கையில் திணித்து,

'பிடி, இது அச்சாரம்!' என்று பேரத்தை முடித்து வைத்தான்.

அந்த வாரத்தின் சனிக்கிழமையில் பம்புசெட்டுத் தொட்டியில், தண்ணீர் எடுத்து தலையில் ஊற்றிக் குளித்துக் கொண்டிருந்த அய்யாக்கண்ணு, இனாம் நாச்சியார்கோவில் கிராமத்தின் கவர்மெண்டு ஆஸ்டல் பக்கம் டிராக்டர் வரும் சத்தம் கேட்டான். திரும்பிப் பார்த்தபோது, ஒரு டிரெய்லருடன் டிராக்டர். அதில் ஐந்தாறு ஆட்கள் வந்து கொண்டிருந்தனர்.

‘வெயில் ஏறிக்கிடக்கு. இப்பப் போய் இவங்க வர்றாங்களே. வெள்ளெனவே வந்தா என்னவாம். வெவரங் கெட்ட பயலுவ. வெள்ளெனவே வந்திருந்தா, இப்ப நேரத்துக்குள்ள வெட்டி எடுத்துக்கிட்டுப் போயிருக்கலாம்’ அய்யாக்கண்ணு மனசுக்குள் சலித்துக் கொண்டான்.

டிராக்டரில், டிரைவர் சீட்டுக்கு அருகே அந்த பச்சையப்பன், அதே வெள்ளை வேட்டி, அதே வெள்ளை நிற அரைக்கை சட்டை, அதே வெத்திலை, பாக்கு. கொலையாளிகளைப் போல தெரிந்த வேலையாட்கள் கோடாரி, கடப்பாரைக் கம்பிகளுடன் குதித்தனர்.

- ‘நடுவுல வர்றபோது, ரெண்டு ஆளுக வீட்டுல நிறுத்தி அவங்களையும் கூட்டிக்கிட்டு வர வேண்டியதாப் போச்சு. இப்ப வேலைய ஆரம்பிச்சுடுறோம்!’

- ‘ஒரு நிமிசம். இந்த ஜே.ஈ. ஆபீசுக்கு தகவல் சொல்ல வேணாமா?’ என்று கேள்வியைச் சொடுக்கினான் அய்யாக்கண்ணு.

- ‘அட நீ ஒண்ணு! அவனுக கெடக்குறாங்க. எங்க, எதுல பொறுக்கித் திங்கலாம்னு அந்த படிக்காசுவைத்தான்பட்டி ஜே.ஈ., ஏ. ஈ. ரெண்டு பேரும் நாய் மாதிரி நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு அலையறாங்க. என்னிக்காவது லஞ்சம் வாங்கற போது கையும், களவுமா பிடிபட்டு, விலங்கு மாட்டி உள்ள போகப் போறானுவ. மலம் திங்கற பன்னிங்க!’ பச்சையப்பன் கோபத்தில் வெடித்தான்.

- ‘சரி, அப்ப நீங்க வேலைய ஆரம்பிங்க. அதுக்கப்புறம் வர்றதை நாம பாத்துக்கலாம்’ அய்யாக்கண்ணு வேலை தொடங்க சைகை செய்தான்.

களத்தில் குதித்தார்கள் பச்சையப்பன் ஆட்கள். மூணு பேர் அந்த ஒலவ மரத்தைச் சுற்றி நின்று கோடாரி வீசத் தொடங்கினார்கள். மரத்தில் வெட்டு விழும் இடுப்புப் பக்கத்தில் பச்சையப்பனின் கண் பார்வை நிலை குத்தி நின்றது. நீர்ச்சத்து ஏறிக்கிடந்த மரம் இலகுவாய் இளக்கம் கொடுத்தது. சில்லுச் சில்லாய் அதன் தண்டு சிதறி விழ ஆரம்பித்தது. முரட்டு ஆட்கள் ரொம்ப மூர்க்கத்தனமாய் ஆயுதப் பிரயோகம் செய்தனர்.

கூலியாட்களின் கருத்த உடலில் வழிந்த வேர்வைத்துளிகளில், சூரிய ஒளி பட்டு மின்னியது. இப்போது ஆள் மாற்றி நின்று வெட்டினார்கள். இடுப்பு சிறுத்து, புதிதாய்ச் சமைஞ்ச மெலிந்த பெண்ணின் இடுப்பு போல ஆனது ஒலவ மரம். பத்து நிமிஷம் இளைப்பாறி, ஆளுக்கு ஒரு குடம்

தண்ணியை ஒரே மூச்சில் குடித்து விட்டு, மீண்டும் மரம் வெட்ட ஆரம்பித்த போது, அவள் மெல்ல முனகினாள்.

சுதாரித்த ஆட்கள், டிராக்டரிலிருந்து கொண்டு வந்து தடித்த நைலான் கயிறுகளை மரத்தின் மேல் கிளைகளில் கட்டி, அதன் நீண்ட மறு முனைகளை டிராக்டரின் பின்புறம் இழுத்துக் கட்டினார்கள். பிறகு பச்சையப்பன் டிரைவரைப் பார்த்துக் கொண்டே, தன் தோள் துண்டை எடுத்துக் காற்றில் வீசினான். புரிந்து கொண்ட டிரைவர், டிராக்டரை உசுப்பி எழுப்ப, வண்டி மெதுவாக முனகிக் கொண்டே அசைந்தது. இறுகக் கட்டப்பட்ட நைலான் கயிறுகள் தெறித்து விடுவன போல முறுக்கேறி நின்றன. டிரைவர் வண்டியின் மூச்சை இளைக்க விட்டு விட்டு, மீண்டும் அதை உசுப்பினான். இப்போது மரமும் இறுகக் கட்டப்பட்ட கயிறுகளும், கடும் முனகலோடு ஒன்றுக்கொன்று விடாப்பிடியாக முறுக்கேறி நின்றன. டிரைவர் மறுபடி ஒரு முறை இஞ்சினின் மூச்சை இளைக்க விட்டு விட்டு, பிடி கொடுத்து ஒரு இழு இழுத்தான். கயிறுகளின் இறுக்கமும், அது இழுத்து நின்ற ஒலவ மரமும், பார்ப்பதற்கு ஆடி மாச ஆண்டாள் திருத்தேரை பக்தர்கள் படாதபட்டு இழுப்பது போன்றே தோன்றியது.

‘பட் படால், படால்’ என்ற இடியோசை காதைப் பிளந்தது. மரம் அதன் இளைத்த இடுப்போடு முறிந்தது. அதன் படர்ந்த கிளைகள், தண்டு சகிதம் வடக்குப் பக்கமாய் அசைந்து சாய்ந்தது.

ஏதோ பெருமாள் குடி கொண்ட திருவண்ணாமலையே குடை சாய்ந்தது போல மொத்த மரமும் மெட்ராஸ் நாடார் காட்டின் பக்கம் விழுந்தது. மிச்ச சொச்சமாய்க் கிடந்த துண்டுக் கொப்புகளை மேலும் வெட்டி அப்புறப்படுத்தினர் கூலியாட்கள்.

வீழ்ந்த ஒலவ மரம், பூமியெங்கும் பரந்து கிடந்தது. மல்லாந்து கிடந்து வானம் பார்த்தது. ஒரு தடவை அதைப் பார்வையால் விழுங்கிய பச்சையப்பன், அதன் அருகில் போய் தன் வலது காலை உயர்த்தி அதன் பருத்த மார்பு ஒன்றின் மேல் வைத்து மிதித்தான். அது சிலிர்த்தது. தன்னைப் பெண்டாள வந்தவனை ஏறிட்டுப் பார்த்தது. பச்சையப்பன் கீழுதட்டில் ஒரு கேலிச் சிரிப்புடன், மீண்டும் அதன் தொடைகளைத் தன் காலால் அழுத்தினான். அது மீண்டும் சிலிர்த்தது.

தன் பௌருஷத்தால் அதை வெற்றி கொண்டோம் என்ற மமதையில், தன் பூரண ஆண்மையின் வெளிப்பாடாக, பச்சையப்பன் ஒலவ மரத்தைப் பார்த்து, ஒரு சிரிப்பு சிரித்தான். சம்போகம் முடிந்த திருப்தியில் ஒலவ மரம் சோர்ந்து, தளர்ந்து போய்த் தரையில் கிடந்தது.

-----------------------

**‘திணை’** - டிசம், 2013 - பிப், 2014

## 3. அச்சம் தவிர்த்தான்

ரயில்வே கேட்டைக் கடந்து, கிருஷ்ணன்கோவில் கண்மாயின் மேட்டில் ஏறி, வளைந்து சென்ற அந்த மேட்டில் பயணித்து, பின் சரேலென்று இறங்கி, வலதுபுறம் இருந்த காவல் கோபுரத்துடன் கூடிய கிறித்தவ தேவாலயத்தைக் கடந்து, அத்திகுளம், கிராமத்தின் சாயாக்கடைகள், சைக்கிள் கடைகள், ஊர்ப்பொதுச் சாவடி யாவும் கடந்து, ஒடுங்கிய தார்ச் சாலையின் வலது பக்கம் வண்டியை ஒடித்த போது, ஸ்கூட்டரின் முன்பக்கம் கைப்பிடியுடன் மேலும், கீழுமாய் தடால் தடாலென்று குதித்தது.

இந்த வட்டாரத்திலேயே மிகவும் மோசமான சாலை என்று பேரெடுத்தது அத்திகுளத்திலிருந்து நாச்சியார்பட்டிக்குச் செல்லும் ஒற்றையான தார்ச்சாலை. பல்லாங்குழிகள் போல சாலையெங்கும் மேடு பள்ளங்கள், குழிகள். ஒவ்வோர் பள்ளத்திலும் விழுந்து எழுந்தபோது, ஸ்கூட்டரின் முன்பக்கமே குலுங்கியது. பிரேக்கை அணைத்து, அணைத்து ஒவ்வொரு பள்ளமாய் பார்த்து, கவனத்துடன் வண்டியைச் செலுத்த வேண்டியிருந்தது. அத்திகுளம் விலக்குத் தாண்டியதுமே சாலையின் இருபக்கங்களும் வானம் பார்த்த பூமிதான். மானாவாரி புஞ்சைக் காடுகள் ‘பஹோ’ வென்று வானம் பார்த்துப் பரந்து கிடந்தன. விரிந்த ஆகாயத்தின் கீழ் பூமி பரந்திருந்தது. கரிசல் பூமியில் எங்கும் மக்காச்சோளப் பயிர்கள். அரை ஆள் உயரத்தில் வானம் பார்த்து மழைக்காக ஏங்கி நின்றன.

கீழ் வான வெய்யிலின் நீண்ட கதிர்கள் பட்ட இடமெல்லாம் பொன் மயம். வழியெங்கும் சாலை ஓரம் காவல் காத்து நின்ற கருவை மரங்கள். மருந்துக்குக் கூட மனித நடமாட்டம் அற்ற புஞ்சை பூமி. இங்கு சோளம் விதைத்து விட்டு வீட்டுக்குப் போய் விடுவார்கள் போலும். பிறகு நாலு மாசம் கழித்து சாவகாசமாய்த் திரும்பி வந்து அறுவடைக்கு நாள் குறிப்பார்களோ என எண்ணத் தோன்றியது.

வேலியில்லாமலும், எல்லை குறிக்காமலும், சம்சாரிகள், பார்த்த இடமெல்லாம் மக்காச்சோள வெள்ளாமை செய்து வைத்திருந்தார்கள்.

மேற்குத் தொடர்ச்சி மலையின் கருஞ்சாம்பல் நிறப் பின்னணியும், நிர்மலமான வானமும், காலைப் பொழுதின் அமைதியும், மெல்லிய குளிர் காற்றும், சூரியனின் சுடர்களும், எங்கும் பார்த்த வெள்ளாமை பூமியும் கொண்ட காட்சி ஒரு கணம் கண்களில் நிறைந்தது. சர்வ வல்லமையான

தெய்வத்தின் சிருஷ்டி இது தானோ என்று வானம் நோக்கி கை கூப்பிடத் தோன்றியது. இக்காட்சியை உட்கார்ந்து நிதானமாக, தூரிகையால் சித்திரமாகத் தீட்டிய இறைவன் நல்ல ஒரு ஓவியன். நல்ல கலைஞன். அல்லது பரம்பொருளே இப்படி இயற்கையெனும் வடிவம் எடுத்துத் தன் நிஜ விஸ்வரூபத்தைக் காட்டுகிறதோ என்றும் மனதில் ஒரு கணம் பிரமிப்பு தட்டியது. காணும் இடமெங்கும் கடவுளின் மாட்சி என அவன் உணர்ந்தான்.

இத்தகைய சிருஷ்டிகளுக்கு ஒரு காரணகர்த்தா இருந்தே தீர வேண்டும். எனில் அவன் எவ்வாறு இருப்பான்? சகலத்துக்கும் உருவம் தந்த ஒருவனின் உருவம் எப்படி இருக்கும்? பரம்பொருளின் திவ்விய சொரூபம் எப்படி இருக்கும்?

தார்ச் சாலையில் இருந்து பல கிளைச் சாலைகள் பிரிந்து வலதும், இடதுமாக சென்றன. ஸ்கூட்டரை மிகுந்த கவனத்துடனே நிதானமாகத்தான் அவன் செலுத்த வேண்டியிருந்தது. வழியில், காரை வீடுகளும், கான்கிரீட் வீடுகளும் இருந்த நாச்சியார்பட்டி தென்பட்டது. அதன் ஊர்ப்பொது ஊரணி தென்பட்டது. பஞ்சாயத்து நீர்த்தேக்கத்தொட்டி தென்பட்டது. முண்டாசு கட்டிய ஊர் மக்கள் தென்பட்டார்கள்.

சாலையில் இப்போது வேகமெடுத்து முன்னேறியபோது, நல்லம தேவன் பட்டியை ஸ்கூட்டர் கடந்தது. வலது பக்கம் பெரிய பஞ்சாலை நின்றது. அதன் ஊழியர்கள் இரவு ஷிப்ட் முடிந்து சைக்கிள் மிதித்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். ஸ்கூட்டர், அந்தத் தொழிலாளிகளின் கூட்டத்தைக் கடந்து மேலே சென்றபோது, சாலை முடிந்து, குறுக்காக ஒரு தார்ச்சாலை ஓடியது. இதுவும் அதே லட்சணம்தான். இந்தச் சாலையில் வலது பக்கம் போனால், புதுச்செந்நெல் குளம் கிராமம். முழுக்க முழுக்க தெலுங்கு மட்டுமே பேசும் வடுக இன மக்கள் வாழும் இடம்.

அவன் ஸ்கூட்டரை இடது பக்கம் ஒடித்து, மேலும் கவனமாகச் சென்றான். வலது பக்கம் ‘ராமலிங்காபுரம் 0.5கி.மீ’. என்று தெரிந்த போர்டைப் புறக்கணித்தான். வேகம் பிடித்து, ஆக்சிலேட்டரை முடுக்க, அது சீறியது. பத்து நிமிஷம் பயணித்த பின், அவன் தேடி வந்த கிராமம் தெரிந்தது. ஊர் வாசலில் நெடுஞ்சாலைத்துறையின் செவ்வக போர்டு "அச்சம் தவிர்த்தான்" என்று சொன்னது. உள்ளே நுழைய, வலது பக்கம் கிராமப் பள்ளிக்கூடம், பஞ்சாயத்து ஆபீஸ், சிறிய ஆஸ்பத்திரி, ஊர் சனங்கள் வம்பளக்கும் சாயாக் கடைகள், உரக்கடை, பலசரக்குக்கடைகள், ஆடு-புலி ஆட்டம் ஆடும்

அரசமரத்தடி சிமிண்டுத்தரை, அதில் உறங்கும் வயசாளிகள், பீடி உறிஞ்சும் சட்டை போடாத கூலித் தொழிலாளிகள் யாவற்றையும் கடந்து சென்று, அங்கு காலை பஸ்ஸுக்காகக் காத்து நின்ற, பேண்ட் சட்டையில் பளிச்சென்று தெரிந்த இளைஞனிடம் சென்றவன், ஸ்கூட்டரை நிறுத்தி அதன் இஞ்சினை அணைத்தான்.

- ‘சார், இங்க பெருமாள் கோவில் எங்க இருக்கு?’

- ‘பெருமாள் கோவிலா? அது இப்படியே போகணும் ‘. கை காட்டினான் ஊர்க்காரன்.

- ‘கொஞ்சம் சொல்லுங்க சார்! ‘

- நேராப் போங்க. அங்க வி.ஏ.ஓ. ஆபீஸ் பக்கம் இடது பக்கம் வளைஞ்சீங்கன்னா நேரா ஒரு பாதை போகும். அதுல அப்படியே போனா வண்ணான்துறை வரும். அந்த வண்ணான்துறையைத் தாண்டிப் போனா சில வீடுகள் இருக்கும். அது முடியற இடம் தான் அக்ரஹாரம். அந்த அக்ரஹாரத்துல தான் பெருமாள் கோவில் இருக்கு. பாத்துப்போங்க’.

- ‘ரொம்ப தேங்க்ஸ் ‘

ஸ்கூட்டரை மீண்டும் உசுப்பி, ஆக்சிலேட்டரை மாற்றி அந்த இளைஞன் காட்டிய திசையில் போனான்.

காலை கரடுமுரடாய் இருந்தது. வண்ணான்துறையைக் கடந்து, வீடுகள் கடந்து, அக்ரஹாரத்திற்குள் நுழைந்தவன் ஏதோ யுத்தம் முடிந்த ஊருக்குள்ளே வந்து விட்டோமோ எனத் திகைத்தான்.

நீண்ட அக்ரஹாரத்தெரு தென்-வடலாய் இருந்தது. ரெட்டை வரிசையிலும் வீடுகள். ஓடு வேய்ந்த காரை வீடுகள். எல்லாமே மொட்டை மாடியுடன் கூடிய வீடுகள். பழைய காலத்துப் பாணியில் அரைத்துப் பூசிய வெள்ளைச் சுண்ணாம்புக் காரைக் கட்டிடங்கள். வெண்கலப் பூண் போட்ட இற்றுப்போன முரட்டு மரக்கதவுகள். பூட்டிய மர ஜன்னல்கள்.

ஆள் அரவமற்ற வீதியில் இருபக்கமும் பார்த்தபடி ஸ்கூட்டரில் சென்றவன், இது அக்கிரஹாரம் தானா என்று தனக்குள்ளே ஒரு கேள்வியும்

கேட்டுக் கொண்டான். அந்தத் தெருவின் இடதுபக்கம் ஓரிடத்தில், தெருக்குழாயிலிருந்து கொட்டிய தண்ணீர் பிளாஸ்டிக் குடத்தை நிறைத்து, பின் தண்ணீர் குடத்திலிருந்து நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. அங்கு ஸ்கூட்டரை நிறுத்தினான்.

அருகே இருந்த வெண்கலப் பூணிட்ட மரக்கதவு பூட்டப்பட்டிருந்தது. வீட்டின் முன்புறம் இழைத்த மரங்கள் தாங்கிப் பிடித்த திண்ணை வெறுமையாய் இருந்தது. வந்தவன் குரல் கொடுத்தான்.

- ‘மாமி… மாமி…’

- பதில் இல்லை

- ‘மாமி… மாமி…’

நடந்து சென்று, படிகள் ஏறி, திண்ணையில் நின்று மீண்டும் குரல் கொடுக்க, பதில் ஏதும் இல்லை. திண்ணையின் நிழலில் நின்று கதவைத் தட்டியதும், சிறிது நேரம் கழித்து,

- ‘இதோ வர்றேன்! செத்த இருங்கோ!’

வந்து மெதுவாகக் கதவு திறந்ததும், வந்த பெண் எழுபதைத் தாண்டியிருந்தாள். குள்ளமாய், கரிய உருவம். கசங்கிய, அழுக்குச் சுங்கடிப் புடவை கட்டியிருந்தாள்.

- ‘அங்குச்சி மாமிங்கறது நீங்களா?’

- ‘ஆமா, நான் தான் அங்குச்சி மாமி. உங்களுக்கு என்ன வேணும்? ‘

வலது கை கண்களுக்கு மேலே குடை பிடித்தன.

- ‘என்ன விஷயம். சொல்லுங்கோ! ‘

- ‘மாமி, நான் காசினிவேந்தன். ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து வர்றேன். என் வீட்டு ஓனர் நாராயணன் மெட்ராஸ்ல இஞ்சினியரா இருக்கார். அவர் இந்த புரட்டாசி மாசம் இங்க ஊருக்கு வர்றார். இங்கு ஸ்ரீனிவாசபெருமாள் கோவில்ல ஏதோ வேண்டுதலாம்.

நிறைவேத்தணுமாம். அதனால என்னை முன்னாடியே அனுப்பி வெச்சார். '

- 'அப்படியா! உள்ளே வாங்கோ! இங்க வந்து உக்காருங்கோ. சூடி, இங்க வாம்மா! வந்து மாமாவுக்கு ஒரு ஸ்டூலை எடுத்து போடும்மா!'

- 'வாங்கோ மாமா, நமஸ்காரம்! '.

- 'சூடி, இந்த மாமா காசினி வேந்தன். ஸ்ரீவில்லிபுத்தூர்ல இருந்து வந்திருக்கார். ஸ்டூலை எடுத்துண்டு வந்து இவருக்குப் போடும்மா!'.

சூடி உள்ளே போனாள். ஒரு சிறிய, இருண்ட அறையிலிருந்து ஒரு ஸ்டூலைத் தூக்கிக் கொண்டு வந்து காசினிவேந்தன் அருகே போட்டாள்.

- 'இருக்கட்டும் மாமி' என உட்கார்ந்தான்.

- 'நான் என்ன செய்யணும்னு சொல்லுங்கோ!'

- 'அவர், எங்க வீட்டு ஓனர் வர்ற இருபத்தி மூணாம் தேதி இங்கு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு டிரெய்ன்ல வர்றார். அவரோடு அவர் ஒ.ஃய்பும் வர்றா. வந்ததும் ஒரு நாள் அங்க ஸ்ரீவில்லிபுத்தூர்லயே தங்கி, சொந்தக்காரா எல்லாரையும் பாக்கறார். மறுநாள், அதிகாலை இங்க அச்சந்தொரத்தான் வர்றா, வந்ததும் இங்க தான் குளிக்கறா, குளிச்சுட்டு மடியா இங்க சீனிவாசப் பெருமாள் கோவில்ல சேவிச்சுட்டு, பிறகு சக்கரைப் பொங்கல் தளிகை பண்ணி பெருமாளுக்கு அமிசேத்தி. எல்லோருக்கும் விநியோகம். கோவில் வேண்டுதலை முடிச்சுட்டு மதியம் இங்க இருந்து கிளம்பறா. சாயங்காலம் கொல்லம் டிரெய்ன்ல மெட்ராஸ் புறப்படறா. அவ்வளவுதான். இங்க ஞாயிற்றுக்கிழமை அன்னிக்கு நீங்க தான் சக்கரைப் பொங்கல் தளிகை பண்ணித் தரணும். அதனால தான் முன்கூட்டியே உங்க கிட்ட சொல்லி ஏற்பாடு பண்ணி வெக்கச் சொல்லி எனக்கு போன் பண்ணி சொன்னா. தளிகைக்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் நீங்களே வாங்கி வெச்சிடுவேளாம். அதான் சொல்லிட்டுப் போக வந்தேன் '.

- ‘என்னால இப்பல்லாம் முன்ன மாதிரி வேலை செய்ய முடியல. இத்தனை வருஷம் எல்லா தளிகை வேலையையும் நானே இழுத்துப் போட்டுண்டு செஞ்சிண்டிருந்தேன். இப்ப உடம்பு தளர்ந்து போச்சு’.

- ‘இல்ல மாமி! நீங்க தான் கொஞ்சம் பெரிய மனசு பண்ணி இந்தத் தளிகையை பண்ணித் தரணும். ஒரே ஒரு படி அரிசி. சக்கரைப் பொங்கல். வேணும்னா எல்லா மளிகைச் சாமானையும் நானே கொண்டு வந்து கொடுத்திடறேன். அவ்வளவு தான்! ‘.

- ‘கேளு. என்னால முடியல. உடம்பு ஆட்டம் கொடுத்துடுத்து. என் ரெண்டு பெண்ணையும் காஞ்சிபுரத்துல கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டேன். என் மூத்த பையன் சந்தானம் ஈ.பி.ல. வேலை பாத்தான். அவன் ஆத்துக்காரி அவனோட வாழப் பிடிக்காம அவளோட அப்பா வீட்டுக்குப் போயிட்டா. இப்ப என் பிள்ளை சந்தானம் தான் எனக்குப் பாதுகாவல். வெளில போயிருக்கான். இப்போ சித்த நாழில வந்துடுவான்’…

- சந்தானம் வந்து சேர்ந்தான். சட்டை இல்லாத கரிய உடலில் பூணூல் தெரிந்தது. ஒரு துண்டைத் தோளில் போயிட்டிருந்தான். இடுப்பு வேஷ்டியை மடித்துக் கட்டியிருந்தான்.

- ‘அம்மா, நீ கேட்டபடி பலசரக்கெல்லாம் வாங்கிண்டு வந்துட்டேன். பலசரக்கு கடைக்காரனுக்கு இன்னமும் பாக்கி இருக்கு. அதைத் தீர்க்கச் சொல்லி கடைக்காரன் சொன்னான். இப்போதைக்கு கடனாக் கொடுடான்னு சொல்லி வாங்கிண்டு வந்தேன். ஆமா, இவர் யாரு?’.

- ‘சந்தானம், இவர் தான் காசினி வேந்தன். ஸ்ரீவில்லிபுத்தூர்ல இருந்து வந்திருக்கார். விவசாயம் பாக்குறாராம். இவரோட ஹவுஸ் ஓனர் மெட்ராஸ்ல இருந்து கோவிலுக்கு பெருமாள் சேவிக்க வர்றாராம். அதுக்கு ஒரு படி சக்கரைப்பொங்கல் தளிகை பண்ணித்தர முடியுமான்னு கேக்கறார்.

- ‘என்னிக்கு?’

- ‘வர்ற இருபத்தி மூணாந்தேதி ஞாயித்துக் கிழமை’.

- ‘வேற ஜோலி வெளியே இல்லாம இருந்தா, இருந்து தளிகை பண்ணித் தர்ரேன் ‘.

நேரே காரைச் சுவர் அருகே சென்றவன், எண்ணைப் பிசுக்கும், அழுக்கும் ஏறியிருந்த சுவரில் தொங்கிக் கொண்டிருந்த மாதக் காலண்டரில் உற்றுப் பார்த்து விட்டு,

- ‘மாமா, இருபத்து மூணாம் தேதி எனக்கு வேற ஜோலி இல்ல. அதுக்கு முந்தின நாள், ராஜபாளையத்துல ஒரு தெவசத்துக்கு தளிகை. அட்வான்ஸ் கை நீட்டி வாங்கிட்டேன். அதுக்கு அடுத்த நாள் சும்மாதான் இருக்கேன். இங்க தான் இருப்பேன். அவர் வந்தா மடப்பள்ளில வெச்சு தளிகை பண்ணித் தர்றேன் ‘.

- ‘ரொம்ப தேங்க்ஸ்ன்னா. எங்கே நீங்க மாட்டேன்னு சொல்லிடுவேளோன்னு பயந்திண்டே இருந்தேன். ‘

- ‘இருந்தா தளிகை கைங்கரியம் பண்ணி வெக்கப் போறேன். நீங்க பணம் தரப்போறேள். இதுல என்னத்துக்கு பிடிவாதம்?! - சந்தானம் விகல்பமின்றி சொன்னான்.

- ‘இந்தாங்கோ. பிடிங்கோ அட்வான்ஸ்’ ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எண்ணி எடுத்து சந்தானத்திடம் நீட்ட, அவன் உடனே வாங்கிக் கொண்டு அங்குச்சி மாமியிடம் நீட்டினான். அவள் வாங்கிக் கொண்டு சமையற்கட்டுக்குள் நுழைந்தாள்.

அங்குச்சியைப் பின் தொடர்ந்து சென்ற சூடி தன் பாட்டியிடம் ,

‘பாட்டி, எனக்கு க்ரீம் பிஸ்கட்டு வேணும். நேத்திக்கே வாங்கித் தர்றேன்னு சொன்னியே!’ என்று கோரிக்கை மனுவைப் பாட்டியிடம் தந்தாள்.

அங்குச்சி உடனே,

‘க்ரீம் பிஸ்கட். அவ்வளவுதான? கொஞ்ச நேரம் கழிச்சி, நாடார் கடைக்குப் போயி, உனக்கு நீ கேட்ட க்ரீம் பிஸ்கட் வாங்கித் தர்றேன்டி என் செல்லம்! ‘ என்றாள்.

காசினி வேந்தன், ‘அண்ணா, இங்க வந்தது வந்துட்டேன். ஒரு சுத்து கோவிலைப் பார்த்துட்டுப் போயிடறேன்! ‘ என்றான்.

- ‘இதோ வாங்கோ. சேர்ந்தே போகலாம் ‘ என்றான் சந்தானம்.

அக்ரஹாரத்தின் தென் மூலையில் தெருவை அடைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தது அந்தப் பெருமாள் கோவில். தூரத்தில் இருந்து பார்த்த போதே, கட்டிடம் முழுக்க மேலிருந்து கீழாக வெள்ளையும், செங்காவிப் பட்டைக் கோடுகளும் மாற்றி மாற்றி அடிக்கப்பட்டிருந்தது தெரிந்தது.

கோவில் வாசல் படிக்கட்டுகளில் காகிதக் குப்பைகளும், புகையிலைப் பொட்டலத்தின் பிளாஸ்டிக் உறைகளும், பீடித் துண்டுகளும் சிதறிக் கிடந்தன.

கோவில் வாசலில் இருந்த பிரம்மாண்டமான கதவு பதினைந்து அடி உயரத்தில், பழங்கால கருங்காலி மரத்தில் செய்யப்பட்டிருந்தது. பெயிண்ட் இல்லாமல் இத்து போயிருந்த கதவுகள். கதவில் தொங்கிக் கொண்டிருந்த நீளச் சங்கிலிகளை இணைத்து நின்ற பெரிய இரும்புப் பூட்டு துரு ஏறிப் போயிருந்தது. சாவியைப் பூட்டின் துவாரத்தில் நுழைத்த சந்தானம்,

- ‘இந்தக் கோவிலுக்கு யாருமே இப்ப வர்றதில்லை. எப்பவாவது யாராவது வருவா. அவா வர்ற போது கதவைத் திறக்கறது தான். இப்பல்லாம் யாருமே இங்க வர்றது கிடையாது’.

சாவியால் திருகித் திருகி, குடைந்து, குடைந்து, சந்தானம் பூட்டோடு போராட்டம் நடத்தியதில், இறுதியாய் அந்தத் துருப்பிடித்த பூட்டு மறுமொழி சொன்னது. ‘கொடக்’ என்று திறந்து கொண்டது.

இணைப்புச் சங்கிலிகளைப் பிரித்து, உயரமான இத்துப் போன கதவுகளை பிரித்தபோது, கதவுகளில் எண்ணையிடப்படாத கீல்கள் கிர்ர்ரீச், கிர்ர்ரீச், கிர்ரீர்ர்... கிர்ரீர்ர்... ‘ என்று நாராசமாய் சப்தம் எழுப்பின.

உள்ளே நுழைந்ததும், தூசியும், தும்பட்டையுமான சிமெண்ட் தளம். அங்கும், இங்கும் உடைந்து செங்கல்கள் துருத்திக் கொண்டு நின்றன. கோவில் எங்கும் குப்பை, நியூஸ் பேப்பர் காகிதங்கள், பிளாஸ்டிக் பைகள், இலை தொன்னைகள். கோவிலின் மேற்கு மூலையில் ஒரு பெரிய அரச மரம்.

அது இலைகளை உதிர்த்துக் கொண்டிருந்தது. கொடுக்காப்புளி மரங்கள், இலையின்றி மொட்டையாகத் தெரிந்தன. சிமிண்ட் தளமெங்கும் அரச மரத்தின் காய்ந்த இலைகள் தரையே தெரியாதவாறு மூடியிருந்தன. கோவிலின் கிழக்கு மூலையில் மடப்பள்ளி. அதன் இரும்பு ஜன்னல்கள் புகையோடிக்கிடந்தன. மடப்பள்ளி பூட்டியே கிடந்தது.

- ‘கோவிலில் யாரும் திருவாராதனம் பண்ணலியா?’

- ‘யார் பண்றா? இங்க திருவாராதனமெல்லாம் கிடையாது. அதெல்லாம் நின்னு ரொம்ப வருஷமாச்சு’.

- ‘ஏன், நீயாவது பண்ண வேண்டியது தானே!’.

- ‘நான் ஆரம்பத்துல பண்ணின்டு தான் இருந்தேன். ஒரு அரைக்காப்படி அரிசியைப் போட்டு மடப்பள்ளில தளிகை பண்ணுவேன். பெருமாளுக்கு அதைக் கொண்டு தளிகை அமிசேத்தி பண்ணுவேன். இதுக்கு எனக்கு எக்ஸிகியூட்டிவ் ஆபிசர் ஒரு நாளைக்கு அறுபது ரூபாய் சம்பளம்ன்னார். அதை வாங்கறதுக்கு மடவார்வளாகம் கோவிலுக்குப் போனேன். இந்தக் கோவிலுக்கு அங்க தான் ஆபீஸ். அங்க இருக்கற கிளார்க் அறுபது ரூபாயில இருபது ரூபாய் கமிஷன் கொடுத்தா சம்பளம் போடுறேன். இல்லாட்டா அதையும் போட மாட்டேன்னான். உன் சம்பளத்த நீயே வெச்சுக்கோன்னு சொல்லிட்டுத் திரும்பி வந்துட்டேன்’.

- ‘உன்கிட்ட கமிஷன் கேட்டவன் யாருன்னு சொல்லு. நான் மேலதிகாரிட்ட சொல்றேன்’.

- ‘அதச் சொல்லி என்ன பண்ண? அன்னிக்கு இருந்து ஒரு நாள் ஒரு வேளை திருவாராதனம்ன்னு அரைக்காப்படி அரிசி சாப்பிட்டுண்டு இருந்த பெருமாள் அதுக்கப்புறம் நித்திய பட்டினிதான் ‘.

- ‘இது பாவமில்லையா? பெருமாளைப் பட்டினி போடலாமா? நமக்கெல்லாம் படியளக்கறதே அந்தப் பெருமாள் தானே. அவருக்கே ஒரு அரைக்காப்படி அரிசிக்கு வக்கில்லையா?!’

- இது அந்த ஈ.ஓ. ஆபீசருக்குத் தெரியணும். எரியற வீட்டுல பிடுங்கினது ஆதாயங்கற மாதிரி கோவில்ல கிடைச்சதைச் சுருட்டிண்டு கம்பி நீட்டறான் பாரு. மடவார்வளாகம் கோவிலுக்கு வரவேண்டிய குத்தகை பாக்கியெல்லாம் ஒழுங்கா வசூல் பண்ணினாலே இந்தக் கிராமத்துல இருக்கற எல்லாருக்கும் தினசரி இலவசமாவே சாப்பாடு போடலாம். எவன் குத்தகை பாக்கியை வசூல் பண்றான்?'.

சந்தானம் முன்னே நகர்ந்து நான்கு படிகள் ஏறி, மங்கலான நவ்தால் பூட்டைச் சாவி போட்டுத் திறந்து, இரும்பு ஷட்டர் கேட்டை விலக்கினான். உள்ளே நுழைந்து பார்க்க, இருளில் பெருமாள் நின்றிருந்தார். கண்கள் இரண்டிலும் ஒட்டப்பட்டிருந்த வெள்ளி நயனங்கள். இருளில் கிடந்ததாலோ என்னவோ அருளே இழந்தது போலத் தோன்றினார். அருகில் அமிர்தவல்லி நாச்சியார் மற்றும் உபய நாச்சியார்கள்.

சந்தானம் கீழே இருந்த பழைய டால்டா தகர டப்பாவிலிருந்து மீந்து போன எண்ணையை எடுத்து, தீபக்காலில் ஊற்றி, கால பைரவர் தூணில் தடவி, தீப்பெட்டியை எடுத்துக் கொண்டு போய் விளக்கேற்றினான்.

இப்போது விளக்கொளியில் சீனிவாசப் பெருமாள் கரிய திருமேனி காட்டி நின்றார்.

'இவர்தான் சீனிவாசப் பெருமாள். நின்ற திருக்கோலம், வடக்கே பார்த்து நின்று சேவை சாதிக்கிறார். வலது பக்கம் அமிர்தவல்லித் தாயார். அங்கே பக்கத்தில் உபய நாச்சியார்கள். தீப ஒளியில், கர்ப்பக்கிருகத்தில் நிழல்கள் அசைந்தன. இவர்தான் வருஷக்கணக்கில் பட்டினி கிடக்கார்'.

- 'சரி. இங்க இருக்கற அக்கிரஹாரத்துல இருக்கறவா யாராவது முன் வந்து நானாச்சுன்னு சொல்லி பெருமாளுக்கு நித்தியப்படி திருவாராதனம் பண்ண வேண்டியது தானே?!'

- 'யாரு பண்ணுவா? ஆள் இங்க தங்கினாத்தானே! எல்லாரும் படிச்சு முடிச்சு, வேலை கிடைச்சதும் மெட்ராஸ், பாம்பே, டெல்லின்னு போயாச்சு. பல பேர் அமெரிக்கா, கனடான்னு பறந்து போயாச்சு. பெருமாள் மட்டும் தான் இங்க அநாதையா நிக்கறார். அவருக்கு பாஸ்போர்ட், விசா கிடைச்சா அவரும் பறந்து போயிடுவார் '.

- ‘அண்ணா, பெருமாளைக் கேலி பண்ணாதீங்கோ. அவர் வரப்பிரசாதி’.

- ‘அவர் வரப்பிரசாதியாவே இருக்கட்டும். அவரை அநாதையா விட்டுட்டு எல்லாரும் அசலூருக்குப் போயாச்சே! என்ன பண்றது? கடைசியா இங்க அக்கிரகாரத்துல இருந்தது அம்மாளிப் பாட்டி ஒருத்தி தான். அவளோட பையனுக்கு வேலை கிடைச்சதும், அவளைக் கல்கத்தாவுக்குக் கூட்டிண்டு போயிட்டான். அங்க அவ சௌக்கியமா இருக்கா. பெருமாள் தான் இங்க ஒரு சுகமும் இல்லாம இருக்கார் ‘.

- ‘ அக்கிரஹாரத்துல இப்ப யாரு இருக்கா?’

- ‘நானும் என் அம்மாவும், என் பொண்ணும் மட்டும்தான். மற்றவா எல்லாம் வீட்டை வித்துட்டுப் போய் வெளி தேசத்துல செட்டிலாயாச்சு. இப்ப நான் குடியிருக்கற வீட்டை உள்ளூர்ல இருக்கற பரமுத் தேவர் ரெண்டு லட்ச ரூபாய்க்கு கிரையத்துக்குக் கேக்கறார். வித்துட்டு நாங்களும் வெளியூர் போகலாமான்னு தோணறது. நாங்க தான் இங்க இருக்கற கடைசி குடும்பம்’.

காசினி வேந்தன் தீப ஒளியில் சீனிவாசப் பெருமாளைப் பார்த்தான். விளக்கொளியில் அவர் சந்நிதானம் ஒளிர்ந்தது. பெருமாள் தன்னந்தனியே அச்சத்துடன் நடுங்கிக் கொண்டே நிற்பது போலத் தோன்றியது. அங்கு சந்நிதி மட்டுமே இருந்தது. சாந்நித்யம் இல்லை. கர்ப்பக்கிருகத்துக்குள் எலிகளின் ‘கீச்சு… கிரீச்… கிரீச்… கிரீச்’ சத்தம் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

கர்ப்பக்கிருகத்தை சந்தானம் பூட்டினான். வெளியே வந்த காசினி வேந்தன், வானத்தைப் பார்த்தான். வெய்யில் சூடேறிக் கொண்டிருந்தது. அரச மரத்தில் அமர்ந்திருந்த காக்கைகள் ஏக நேரத்தில் ஒன்றாய்க் கரைந்தன.

- ‘இந்த ஊருக்கு அச்சந்தொரத்தான்னு ஏன் பேர் வந்தது?’.

- ‘அது அச்சந்தொரத்தான் இல்ல. அச்சம் தவிர்த்தான். இந்தப் பெருமாள் எல்லாரோட அச்சத்தையும் நீக்கி தைரியம் அளிப்பார். அதனால அவர் பேரு அச்சம் தவிர்த்த பெருமாள் ‘.

- ‘அப்ப நான் கிளம்பறேன். சனிக்கிழமை அன்னிக்கே தளிகைக்குத் தேவையான எல்லா மாளிகைச் சாமான்களையும் வாங்கிண்டு வந்திடறேன். ரொம்ப முக்கியம், சக்கரைப் பொங்கல் நெய்யில பண்ணினதா இருக்கணும், கிஸ்மிஸ், முந்திரியோட. மடப்பள்ளியை நீயே சுத்தம் பண்ணிக்கிறயா?’.

- ‘அதெல்லாம் நான் பாத்துக்கறேன். ஞாயித்துக்கிழமை நீங்க சீக்கிரமே வந்திடுங்கோ. மத்தியானத்துக்கு மேல வீட்டைக் கிரயம் பேசி அட்வான்ஸ் தர பரமுத் தேவர் வந்தாலும் வருவார். ‘

திரும்பும் வழியில், நாச்சியார்பட்டி தாண்டியதுமே ஸ்கூட்டரில் வேகம் கூட்டினான் காசினி வேந்தன். அத்திகுளம் விலக்குக்கு முன்பாக பரந்த, காய்ந்த கரிசல் பூமியில் மக்காச்சோளக் காடு எல்லையின்றி விரிந்து கிடந்தது. பின்புலத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைகளும், இள நீல நிறத்தில் வெளிறிய வானமும் தென்பட்டது. ஏனோ, அப்போது, அச்சம்தவிர்த்தான் பெருமாளின் உருவம் அங்கு எல்லா இடத்திலும் படர்ந்திருப்பது போல அவனுக்குத் தோன்றியது.

---------

1. தளிகை – சமையல்
2. அமிசேத்தி – தெய்வத்திற்கு உணவு படைத்தல்
3. மடப்பள்ளி – சமையலறை
4. கைங்கரியம் – உதவி, சேவை
5. திருவாராதனம் – பூஜை, வழிபாடு

6. அரைக்காப்படி – அரைக்கால் படி,
கால் படி அளவையில் பாதி

7. உபய நாச்சியார்கள் – மனைவியர்

8. சேவை சாதிக்கிறார் – தோன்றுகிறார்

9. நித்தியப்படி திருவாராதனம்– தினசரி பூஜை

# 4. முத்தா

ஸ்ரீவைணவ சம்பிரதாயத்தில், ‘திருநாடு அலங்கரித்தார் ‘ என்பதும், ‘வைகுண்ட பிராப்தி அடைந்தார் ‘ என்பதும், ‘ஆசார்யன் திருவடி அடைந்தார் ‘ என்பதும் ஒரே அர்த்தம் தரும் பல சொற்றொடர்கள். இயற்கை எய்தினார் என்று பகுத்தறிவுவாதிகளால் சொல்லப்படும். காலமாகி விட்டார் என்றும் சொல்லப்படுவதுண்டு. இறந்து விட்டார் என்பது பொதுவான வார்த்தைப் பிரயோகம்.

முத்தா ஆசார்யன் திருவடி அடைந்தார். முதிர்ந்த வயது. பேரன், பேத்திகளைப் பார்த்து விட்ட பூரண ஆயுளோடு அவர் திருநாடு அலங்கரித்தார். இனி அவர் செய்து முடிக்க இங்கு பூமியில் கடமைகளோ, பணிகளோ எதுவும் இல்லை என்பதால் அவர் வைகுண்ட பிராப்தி அடைந்தார். எண்பத்து எட்டு வயதில் முதல் தாரத்துப் பிள்ளைகள், இரண்டாம் தாரத்து ஆண் மக்கள், பெண் மக்கள் வாரிசுகளுடனும், பேரன், பேத்திகளைப் பார்த்து விட்டு பூரண ஆத்ம திருப்தியில் இயற்கையோடு ஒன்றிவிட்டார்.

மதியம் சாப்பிட்டு முடித்ததும், வீட்டு முன் திண்ணையில் வழக்கம் போல் உறங்கினார். உறக்கம் முடிந்து எழுந்ததும், பின்மாலை வெய்யில், வீட்டின் திண்ணையில் சதுரக்கம்பிகள் பதித்த மரச்சட்டம் வழியே சரிந்து இறங்கிக் கொண்டிருந்தது.

வெற்று உடம்பின் மேல் ஒரு அங்கவஸ்திரத்தை எடுத்துப் போட்டுக் கொண்டு, கொல்லைப்புறம் போய் முகம் அலம்பிக் கொண்டு வந்து பார்த்தவர், சமையலறையை நோக்கி ‘ரமா’ என்று ஒரு குரல் கொடுத்தார். ரமா மன்னி, ‘சொல்லுங்கோ முத்தா!’ என்று பதில் சொன்னாள்.

‘ரமா, எனக்குப் பசிக்கறது. ஏதாவது டிபன் இருந்தா பண்ணிக் கொடேன் ‘ என்றார்.

‘இதோ முத்தா, ரெண்டே நிமிஷம் பொறுங்கோ. சுடச்சுட தோசை வாத்துத் தர்றேன். காலைல பண்ணின வெங்காயச் சட்டினி மிச்சம் இருக்கு. அதுவே போதுமா?’

- ‘போதும்மா, இருக்கறதைப் போடு’.

ரமா மன்னி சமையலறைக்குள் மீண்டும் நுழைந்தாள். மண்ணெண்ணெய் ஸ்டவ்வில் திரியை சரி செய்து, அடுப்பு பற்ற வைத்து, தட்டையான தோசைக்கல்லை ஏற்றி தோசை வார்த்தாள். முதல் தோசையை சுடச்சுட எடுத்துக் கொண்டு, ஒரு தட்டில் வைத்துக் கொண்டு வந்து முத்தாவின்

முன்னால் வைத்தாள். பக்கத்தில் ஒரு சொம்பு குளிர்ந்த ஜலம் வைத்தாள். முதல் தோசையின் முதல் விள்ளலை எடுத்து வெங்காயச் சட்டினியில் தோய்த்து, வாயில் போட்டுக் கொண்டு, சில நொடிகள் கண்ணை மூடிக் கொண்டார் முத்தா.

இரண்டாம் தோசை வார்த்து எடுக்க மீண்டும் சமையலறைக்குள் நுழைந்தாள் ரமா மன்னி.

- 'ரமா, இங்க வாம்மா. நெஞ்சு ஏதோ பிசைஞ்சு வலிக்கற மாதிரி இருக்கு'.

என்று முத்தா சத்தமிட்டார்.

அடுப்பில் தோசையைப் பார்த்துக் கொண்டு நின்ற ரமா மன்னி, ஓடி வந்து பார்க்க, திண்ணையில் குத்த வைத்து உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த முத்தா, சரிந்து பக்கவாட்டில் விழுவதையும், முதல் தோசையின் பாதி மட்டும் சாப்பிடப்பட்டு, மீதி தட்டில் அப்படியே இருப்பதையும் பார்த்து விட்டு பதறிப்போனாள்.

'முத்தா, உங்களுக்கு என்ன ஆச்சு? சொல்லுங்கோ, நெஞ்சு வலிக்கறதா? இதோ, சித்த பொறுங்கோ, அவரை வரச் சொல்றேன். டாக்டருக்கு உடனே சொல்லி அனுப்பறேன். பக்கத்துல யாருமே இல்லையே. என்ன பண்றதுன்னு எனக்கு ஒண்ணும் தோணலியே!'.

- சத்தம் கேட்ட அடுத்த போர்ஷன் இஞ்சினியர் யக்னேஷ்வரன் ஓடி வந்தார்.

'என்னம்மா, என்ன ஆச்சு? தாத்தா உங்களுக்கு என்ன? காலைல கூட நல்லாத்தான இருந்தீங்க. இப்ப உடம்புக்கு என்ன? என்று பதறினார்.

முத்தா வலது கையால் இடது நெஞ்சைப் பிடித்தபடி 'முடியலை ரமா, ரொம்ப வலியெடுக்கறது. கேசவா. நாராயணா!' என்றார். அவ்வளவுதான்.

அடுத்த நிமிஷம் அந்தக் கேசவன், நாராயணனோடு போய் இரண்டறக் கலந்து விட்டார். ரமா மன்னி பதறிப்போய், நேரே வீட்டு வாசற்படி இறங்கி, ரோட்டைக் கடந்து எதிர்ப்பக்கம் இருந்த அருணாச்சல நாடார் நெல் அரவை மில்லுக்குப் போய், முன் பகுதியில் டேபிளில் வைக்கப்பட்டிருந்த தவிட்டுத் தூசி படிந்த டெலிபோனை எடுத்து ˙ தன் ஆத்துக்காரர் சம்பத்திற்குப் போன் செய்தாள்.

ஒவ்வொரு மார்கழி மாதமும் விருதுநகரில், ரெயில்வே பீடர் ரோடில் உள்ள ஆஞ்சநேயர் கோவிலில், ஒரு வாரத்திற்கு ஸ்ரீராம உற்சவம் நடக்கும். சிறிய ஆஞ்சநேயர் கோவில் என்றாலும், பெரிய அளவில் பக்தர்கள் கூட்டம். ரயில்வே பீடர் ரோட்டில் இருந்து ராமமூர்த்தி ரோடு பிரிந்து செல்லும் முச்சந்தியில் ரோட்டை அடைத்துக் கிழக்குப் பக்கம் பார்த்தாற் போல ஒரு பெரிய பிரம்மாண்டமான மேடை போட்டு, ஏழு நாட்களும் ஏதாவது கலை நிகழ்ச்சிகள் நடக்கும். சென்னையில் உள்ள பிரபலங்களை எப்படியாவது பிடித்து வந்து அங்கு மேடையேற்றி விடுவார்கள். வைகுண்ட ஏகாதசி அன்று போக்குவரத்து சந்தடி ஓய்ந்த பின்பு, மேடையின் முன்பு பெரிய ராட்சஸத் தார்ப்பாயை விரித்து, எல்லோரும் உட்கார்ந்ததும் மேடையேறினார் சீர்காழி கோவிந்தராஜன். மைக் செட் சரி செய்து விநாயகர் துதி பாடலைப் பாடி முடித்து, அடுத்த பாடலைப் பாட சுருதி சரி பார்த்துக் கொண்டிருந்தார். இரண்டாம் வரிசையில் தார்ப்பாயில் தனது மூன்று குழந்தைகளுடன் வரிசையில் தார்ப்பாயில் தனது மூன்று குழந்தைகளுடன் ஜெயா அமர்ந்து கச்சேரி கேட்டுக் கொண்டிருந்தாள்.

கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது.

- ‘அதோ, அவங்க தான் ஜெயா மாமி. அவங்களைக் கொஞ்சம் கூப்பிடுங்க. அதோ அவங்கதான் ‘ என்ற குரல் கேட்டதும், கச்சேரி சத்தத்தையும் மீறி ஏதோ பேச்சுக்குரல் கேட்பதைக் கவனித்த ஜெயா, யதேச்சையாகத் திரும்பிப் பார்க்க, அங்கு கோபால் வந்து கொண்டிருந்தான்.

- ‘ஜெயா, கொஞ்சம் எழுந்திரிச்சி வா’.

ஜெயா எழுந்து வந்து,

- ‘என்ன கோபால். என்ன சமாச்சாரம்? ‘ என்றாள்.

- 'ஜெயா, முத்தா சீரியஸா கிடக்கார். நீ உடனே புறப்பட்டு வரணும். சம்பத் உடனே உன்னை கூட்டிண்டு வரச்செல்லி என்னை அனுப்பினான். உடனே வா!'.

ஜெயா பதறிப்போய்,

- 'என்ன கோபால், என்ன விஷயம்? முத்தாவுக்கு ரொம்ப முடியலயா?' என்று கேட்க,

- 'அப்படி ஒண்ணும் மோசமில்லை. ஆனா சீரியஸ். நீ உடனே வரணும் '.

குழந்தைகளை அழைத்துக் கொண்டு, உடனே தான் குடியிருந்த பதினெட்டு ஸ்டோர் காம்பவுண்டிற்குப் போய், வீட்டைத் திறந்து, ராணாவையும், நிவந்தனையும், பக்கத்தாத்து லட்சுமி மாமியிடம் பார்த்துக் கொள்ளுமாறு சொல்லி விட்டு, உடனே பையில் பணம் எடுத்துக் கொண்டு, மூத்த பையன் கிருஷ்ணாவை மாத்திரம் கைப்பிடித்துக் கூட்டிக் கொண்டு கோபாலுடன் மதுரைக்கு பி.ஆர்.சி. பஸ்சில் அவசர அவசரமாய்ப் போய், மெஜூரா காலேஜ் ஸ்டாப்பிங்கில் இறங்கி நடந்து, ஜெய்ஹிந்த்புரம் தீனதயாள் இரண்டாம் தெருவில் வாசல்புற இரும்புக் கேட்டைத் திறந்து உள்ளே போனபோது, முத்தா திண்ணையில் நெடுஞ்சாண் கிடையாகக் கிடத்தப்பட்டிருப்பதையும், தம்பிகள், தங்கை ரோஜி, மூத்தவன் சந்தானத்தின் குழந்தைகள் பிலாக்கணம் பாடிக் கொண்டிருப்பதையும் பார்த்து விட்டு நிலை குலைந்து போனாள் ஜெயா.

வீட்டின் முன்புறத் திண்ணையில், சிமிண்டு தரையில், நாற்பது வாட்ஸ் பல்பு வெளிச்சத்தில் கிடந்த முத்தா குச்சியாய்க் கிடந்தார். முன் நெற்றியில் திருமண் பளீரென்று இருந்தது. பாதித் தலை நரைத்துப் போன சம்பத் மாமா தலையைக் கோதிக் கோதி அழுது கொண்டிருந்தார். கும்பகோணம் சித்தி , முத்தாவின் கால்களைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள். சந்தானம், ரோஜி, ஸ்ரீதர் மாமா, சுந்தாச்சு, துவரிமான் ராஜாமணி, சீமானி இன்னும் பலரும் துக்கித்துக் கொண்டிருந்தார்கள்.

ரமா மன்னி  இருதய நோயாளி என்பதால் அவளை மட்டும் அழ வேண்டாம் என ரொம்பக் கண்டிப்பாக சம்பத் மாமா சொல்லிவிட்டார். இரவு முழுக்க கண்ணீரும், ஒப்பாரியும் தொடர்ந்து, விடியற்காலையிலும் அது

நீடித்தது. ஒருவர் கண்களிலும் பொட்டுத்தூக்கம் கூட இல்லை. எல்லோர் கண்களும் தூக்கமின்றி ரத்தச் சிகப்பாய் இருந்தது. திகில் அடைந்த குழந்தைகள் கண் உறங்காமல் இருப்பது கண்டு ரமணி மாமா ஒவ்வொரு குழந்தைக்கும் அரை அவில் மாத்திரையைப் பாலோடு கலந்து கொடுத்து உறங்க வைத்தார்.

சொல்லியனுப்பி விட்டதில், அதிகாலையிலேயே பிச்சை வாத்தியார் தனது நூற்று எண்பது பவுண்டு கனத்த உடலோடு மெதுவாக அசைந்து கொண்டே வெறுங்கால்களுடன் வீட்டுக்கு வந்தார். அவர் வந்த சில நிமிஷங்களில், அவர் வாயிலிருந்து கட்டளைகள் பறந்தன. ஜெயாவின் தம்பிகள் வேலைகளைச் செய்ய சிட்டாய்ப் பறந்தனர். வீட்டுப் பெண்கள் தலைவிரி கோலமாய் அழுது கொண்டிருக்க, ருக்குமிணிப் பாட்டி முண்டனம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டாள்.

காலை பத்து மணிக்கு வேன் வந்தது. அதில் முத்தா தன் இறுதிப் பயணத்திற்காகத் தயார் ஆனார். தத்தனேரி சுடுகாட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டு, சகலவித சம்பிரதாயச் சடங்குகளுடன், பிச்சை வாத்தியார் சரம மந்திரங்களை தெள்ளத் தெளிவான குரலில் உச்சரிக்க, மூத்த மனைவியின் மூத்த பிள்ளை ராஜாமணி முத்தாவுக்குக் கொள்ளி போட்டான்.

பெரம்பூர் ஐ.சி.எ.ஃப்பில் ஃபார்மஸிஸ்ட்டாக வேலை பார்த்துக் கொண்டிருந்த மூன்றாம் பிள்ளை வெங்கடரமணி செய்தி கேள்விப்பட்டு, அவசரம் அவசரமாக ஆபீசுக்கு லீவு போட்டு விட்டு , மதுரைக்கு இரவு ரயிலில் விரைந்து வந்த போது பிற்பகல் மூன்று மணி இருக்கும். அவனைக் கைத்தாங்கலாய் ஆட்டோவில் ஜெய்ஹிந்த்புரத்திற்கு கொண்டு வந்து சேர்த்தது சம்பத் மாமாவின் மச்சினன் ஆட்டோ வேணு. தத்தனேரி சுடுகாட்டில் முத்தா முழுமையாய் எரிந்து சாம்பலாய் நீர்த்துப் போனதைப் பார்த்த முத்தாவின் வாரிசுகள், வாரிசுகளின் வாரிசுகள் யாவரும், அவர் கடைசியாய் வாழ்ந்த அந்த ஜெய்ஹிந்த்புரம் வீட்டில் கூடியிருந்து, இரவுச் சாப்பாடு முடிந்ததும், முத்தாவின் வரலாற்றை அசை போட ஆரம்பித்தனர்.

பழைய காலத்து எஸ்.எஸ்.எல்.சி பரீட்சையை கோட் அடிக்காது பாஸ் செய்துவிட்டு, அதே மூச்சில் இண்டர்மீடியட் பரீட்சையையும் முடித்துவிட்டு, பி.யூ.சி.யும் படித்து முடித்துவிட்டு, வீட்டில் அவர் இருந்தபோது, அவரது அப்பா, ஒருநாள் மாலை ரங்காச்சு மாமா வீட்டுக்குக் கொண்டு போய் முத்தாவைக் காட்டி,

- 'இவன் தான் என் ஒரே புள்ள. உங்காத்து நாச்சியாருக்கு இவனைப் பெண் கேட்டு வந்திருக்கேன் ' என்று பேசி ஒரே வீச்சில் அனைவரையும் சதாய்த்துவிட்டு, உடனே நிச்சயதார்த்தமும் நடந்தது, அதே வேகத்தில் கல்யாணமும் முடிந்து, உடனே இரண்டு ஆண் பிள்ளைகள் பிறந்தன. ராஜாமணி, சீமானி. இரண்டு பிள்ளைகளையும் பொத்திப் பொத்தி வளர்த்தார். முத்தா, நாச்சியார் மீது கொண்ட பாசம், காதலாகிக் கசிந்து, பின்பு தொடர்ச்சியாக ஏழு பிள்ளைகள். ஆனால், எந்த சுகாதார வசதியும் இல்லாத கால கட்டத்தில் வாழ்ந்ததால், அத்தனை பிள்ளைகளும், ஒவ்வொன்றாய் சீக்கு வந்து செத்துப் போகவே, நாச்சியார் பாட்டி ஒவ்வொன்றாய்க் கொண்டு போய் மதுரை துவரிமானில், வைகை ஆற்றங்கரையில் மணலில் புதைத்து விட்டு வருவாளாம்.

வெள்ளைக்காரன் காலத்தில், சப்-ரிஜிஸ்திரார் வேலைக்கு உட்கார்ந்து, உட்கார்ந்து படிக்கத்தேவையில்லை என்பதாலும், முத்தாவுக்கு பிழையில்லாமல் 'ரென் அண்ட் மார்ட்டின் கிராமர் புக்' ஸ்டைலில் இங்கிலீஷ் எழுதத் தெரிந்திருந்ததாலும், அவருக்கு இண்டர்வியூ வைத்த மிஸ்டர். பிரிக் ஸ்வின்பர்ன், முத்தாவின் அப்பாவி முகத்தோற்றத்தையும், அவர் பின்னந்தலையில் முடிச்சிட்டு வைத்திருந்த குடுமியையும், காதில் ஜொலித்த ப்ளூ ஜாகர் டைமண்ட் கடுக்கன்களையும், நெற்றியில் பிரகாசித்த வடகலை நாமம் ஆகியவற்றையும் பார்த்து விட்டு,

- 'மிஸ்டர் சீனிவாசன் ! வாட் இஸ் திஸ் ? கட் யுவர் ஹோர். ரிமூவ் தோஸ் லைன்ஸ் ஆன் தி ஃபோர்ஹெட் ' என்று அவரது ஸ்ரீவைணவ சின்னங்களை அழிக்கச் சொன்னபோது,

- முத்தா, 'ஸார்! திஸ் இஸ் மை ரிலீஜன். ஐயாம் எ ஸ்டான்ச் ஸ்ரீவைஷ்ணவைட் ' என்று தெள்ளத் தெளிவாய் சுவரில் ஆணியடித்தாற் போல பதில் சொல்லி வைக்க, அந்த ஆங்கிலிக்கன் ப்ராட்டஸ்ட்டான நாட்டிங்காம் நகரைச் சேர்ந்த பிரிக் ஸ்வின்பர்ன், அவரது முகத்தை ஏறிட்டுப் பார்த்து, முத்தாவின் கண்களை ஒரு நிமிஷம் தீர்க்கமாய் உற்றுப் பார்த்தான்.

- 'யு மே கோ' என்று அதட்டலாய்ப் பதில் சொன்னான்.

தன் ஊருக்கு வந்த முத்தாவுக்கு, பத்து நாட்களுக்குப் பின்பு, பழுப்பு நிறத்தில் முரட்டான பெரிய கவரில் 'ஆன் ஐ.சி.எஸ். ஒன்லி' என்ற ஆங்கில வாசகத்துடன் தபால் வந்தது. அதைப் பிரித்துப் பார்த்த முத்தா அதில் முத்து, முத்தான எழுத்துக்களில் அவருக்கு சப்-ரிஜிஸ்தரார் வேலைக்கான நியமன

உத்தரவு வழங்கப்பட்டிருப்பதை படித்துப் பார்த்தார். தன் அம்மாவையும், அப்பாவையும் சேர்த்து சுவரில் தொங்கிய கூடலழகப் பெருமாள் படத்தின் பக்கத்தில் நிற்க வைத்து, அவர்கள் காலில் கவர்மெண்ட் அப்பாயிண்மெண்ட் ஆர்டரை வைத்து, விழுந்து சேவித்து, இரண்டாவது நாளில், தகர டிரங்க் பெட்டி, படுக்கை சகிதம், இராஜபாளையத்திற்கு ரயில்வே ஸ்டேஷனில் போய் இறங்கினார்.

அங்கு மார்க்கெட் வீதியில், கொல்லம் ஓடுகள் வேய்ந்து, மரச்சட்டங்களால் உத்தரங்கள் பாவிய சப்-ரிஜிஸ்தரார் ஆபிசில் பதவியேற்றுக் கொண்ட போது அவரது வயது பத்தொன்பது.

கல்யாணமான புதிய தம்பதிகளைப் பிரிப்பதா என்று பதறிய முத்தாவின் அப்பா, தானே அங்கு இராஜபாளையம் வந்திருந்து, ஆபீஸ் பியூன் மூலமாக ஒரு வாடகை வீட்டைப் பிடித்து, முத்தாவை நாச்சியாருடன் சேர்த்துக் குடி வைத்துவிட்டு, புதிய பண்டம் பாத்திரங்கள் வாங்கித் தந்து விட்டுப் போனார்.

அது முதல், இராஜபாளையமே கதி எனக் கிடந்தார் முத்தா. காலை ஒன்பது மணிக்கு இரட்டை மாடுகள் பூட்டிய வில் வண்டியில் ஆபீசுக்கு வந்ததும், ஓடி வந்து அவரது சிறிய கைப்பெட்டியை பவ்யமாக கையில் வாங்கிக் கொள்வான் ஆபீஸ் ப்யூன் போத்தி. உடனே, ஆபீசுக்குள் நுழைந்து உயர்ந்த மேடையில் இருந்த நாற்காலியில் அமர்ந்து விட்டாரென்றால், சாயங்காலம் வரை பங்கா போட்டுக் கொண்டிருப்பான் போத்தி. வில் வண்டி மாடுகள் ஆபீசின் முன்புறம் இருந்த புங்க மர நிழலில் வைக்கோலை அசை போட்டுக் கொண்டிருக்கும்.

காலை பத்தரை மணிக்கு, சப்-ரிஜிஸ்தரார் ஆபீசுக்கு நேர் எதிரே இருக்கும் ஸ்ரீரங்க விலாஸ் கபேயிலிருந்து அசல் நெய் விட்ட பாதாம் அல்வா, காராபூந்தி, மற்றும் பித்தளை ஃபில்டரில் வடித்த டிகிரி காபி எல்லாம் ஆபீசுக்குள்ளே வரும். டிபன் முடித்ததும், ஒரு சிட்டிகை பொடி எடுத்துப் போட்டுக் கொண்டு விட்டால், மணி ஒன்றரை வரை விடாமல் பத்திரப் பதிவு வேலை இருக்கும். நடுவில் முத்தா நாற்காலியை விட்டு இறங்குவதே இல்லை.

மதியம் நல்ல வெயிலில், மீண்டும் வில் வண்டியில் வீட்டிற்குப் போய், சாப்பிட்டு விட்டு, பிற்பகலில் ஆபீசுக்கு வந்து வைத்து விட்டுப் போன வேலைகளை முடித்து விட்டு, மீண்டும் வீடு திரும்ப மணி ஏழாகிவிடும்.

ஆனி, பங்குனி மாதங்களில் வேலை அதிகம் இருக்காது. ஆபீஸ் காத்தாடும். மற்ற மாதங்களில் இடைவிடாத வேலை இருக்கும். பத்திர எழுத்தர்களே கருப்பு மை பேனாவைக் காகிதத்தில் ஓட்டி, ஓட்டிக் கை சோர்ந்து விடுவார்கள். முத்தாவுக்கு முதுகு வலி எடுத்து விடும். சாயங்காலம் ஆபீஸ் பூட்டப் போகும்போது, போத்தி தான் முத்தாவுக்கு கை, கால்களை நீவி, வலி தீரப் பிடித்து விடுவான். உடம்பு ஓய்வெடுக்க ஏங்கும்.

இராஜபாளையம் முழுக்க இராஜுக்கள் தான். ஆந்திராவிலிருந்து சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வந்து, அங்கு தங்கி, வியாபாரம் செய்த ராஜுக்களின் தாய் மொழி தெலுங்கு தான். அவர்கள் தமிழ் பேசுவதைக் கேட்க, கேட்க முத்தாவுக்கு ரொம்ப வேடிக்கையாக இருக்கும்.

தலையின் பின்புறம் வழிந்த குடுமியும், காதின் கடுக்கன்களும், நெற்றியில் துலங்கிய வளைந்த நாமமும், ஜிப்பா, விசிறி மடிப்பு அங்கவஸ்திரம், தார்ப்பாய்ச்சிக் கட்டு வேஷ்டி சகிதம் வில் வண்டியில் ஆபீசுக்கு வரும் முத்தாவைப் பார்த்த தெலுங்கு பேசும் ராஜுக்கள்,

'ஸ்வாமி, ஸ்வாமி ஒஸ்தாரய்யா' என்று பரபரப்பாய்ப் பேசிக்கொண்டே மரியாதையாய் வழி விட்டார்கள். கை கட்டி நின்று அவர் சொன்ன பத்திரப் பதிவிற்கான அறிவுரைகளைக் கேட்டார்கள்.

- சூஸிரா... ஸ்வாமி சூஸிரா' என்று வேலைக்காரர்களை ஏவி, முத்தாவுக்கு இருந்த தேவைகளைப் பூர்த்தி செய்ய ஓடி வந்தார்கள். காலையில் பொழுது விடிந்ததும், ஒரு ராஜு வீட்டு வேலையாள் வாசலில் நின்று,

- 'சாமீ... சாமீ...' என்று குரல் கொடுப்பான், போய்ப் பார்த்தால்,

- 'நாராயண ராஜா கொடுத்தனுப்பினாரு. இன்னிக்கு அய்யா தோட்டத்துல இதெல்லாம் விளைஞ்சது' என்று சொல்லி ஒரு கூடை நிறைய காய்கறிகளைக் கொண்டு வந்து வாசலில் வைத்து விட்டு, கையெடுத்துக் கும்பிட்டு விட்டுப் போவான்.

அரிசி, பருப்பு, உப்பு, புளி, வத்தல், நெய், பயறு வகைகள், பழங்கள், ஸ்ரீவில்லிபுத்தூர் மண்டை வெல்லம், மலைத்தேன், செக்கில் ஆட்டிய புது மணம் மாறாத நல்லெண்ணை, வாழை இலை என்று வீட்டின் எல்லாத் தேவைகளும் பார்த்து பார்த்து செய்து தந்தனர் ராஜுக்கள்.

அப்பாள் ராஜா வீதியில் பெரிய காம்பவுண்ட் சுவர் வைத்த வீட்டுக்கு மாத வாடகை ரூபாய் நான்கு. அந்த வீட்டுக்கு கடைசி வரை யாரும் முத்தாவிடம் வாடகை கேட்கவில்லை. ஸ்ரீலட்சுமி விலாஸ் தியேட்டரில் புதிய சினிமாப்படம் போட்டால் பத்து டிக்கெட்டுகள் சப்-ரிஜிஸ்திரார் ஆபீசுக்கு ஒரு தியேட்டர் சிப்பந்தி கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போவான்.

முத்தாவுக்கு சினிமா பிடிக்காது. அவர் சாயங்காலம் வில் வண்டியில் கிளப்புக்குப் போய் டென்னிஸ் ஆடுவார். கனமான பிரம்பு டென்னிஸ் மட்டையில் அவர் சர்வீஸ் போட்டாரென்றால், பந்தை எதிர்கொள்ள ராஜுக்கள் திணறுவார்கள். வேர்க்க, விறுவிறுக்க டென்னிஸ் விளையாடி விட்டு, ராஜுக்களுடன் அரட்டையடித்து விட்டு, மீண்டும் வில் வண்டியில் வீடு திரும்ப லேட்டாகி விடும். குழந்தைகள் சாப்பிட்டுத் தூங்கிய பின் தான் அவர் வருவார். அதுவரை நாச்சியார் சாப்பிடாமல் அவருக்காகக் காத்துக் கொண்டிருந்து, அவர் சாப்பிட்ட பின் தான் சாப்பிடுவாள். வீட்டில் அரிசியும், பருப்பும், எண்ணையும், காய்கறிகளும், பழங்களும் குறைவுபட்டதேயில்லை. அவர் ஒரு தடவை கூட வீட்டுக்கு மளிகைச் சாமான்கள் வாங்க மார்க்கெட்டில் உள்ள செட்டியார் கடைக்குப் போனதில்லை.

எப்பொழுதாவது ஆபீசுக்கு தொடர்ச்சியான லீவு விட்டால், குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு, மதுரைக்குத் தன் அப்பா வீட்டுக்குப் போய் விடுவார். அப்பொழுதெல்லாம் அவரது குழந்தைகள் மதுரை துவரிமானில், வைகை ஆற்றின் கரையில் உள்ள தென்னந்தோப்பில் விளையாடுவார்கள். அதைப் பார்க்க பார்க்க அவருக்கு பெருமையாக இருக்கும். வியாதியில் வீழ்ந்த நாச்சியார் படுத்த படுக்கையாய்க் கிடந்து, இருபது நாட்களுக்குப் பின் கண்ணை மூடி விட்டாள். சின்னஞ்சிறுசாய் விடலைக் குழந்தைகளை வைத்துக் கொண்டு, துக்கத்தில் தத்தளித்த முத்தாவுக்கு ஆபத்பாந்தவனாய் உதவியது மதுரை ஆர். எஸ்.பதி மருந்து கம்பெனியில் கிளார்க் வேலை பார்த்த மாதவய்யங்கார்தான்.

முத்தாவின் அநாதரவான நிலையைப் பார்த்து, அவருக்கு ருக்குமிணியை இரண்டாம் தாரமாக கல்யாணம் பண்ணி வைத்தது மாதவய்யாங்கார் தான். ருக்குமிணி இளையதாரமாய் வந்த பின்பு, முத்தாவுக்கு வரிசையாய்க் குழந்தைகள் தான். மூன்று பெண்கள், ஐந்து ஆண் மக்கள். மூத்த பெண் தான் கோதைநாயகி. அவளுக்கு இளையவள் ஜெயா, ஜெயாவுக்கு மூன்று பிள்ளைகள். கிருஷ்ணா, ராணா, நிவந்தன். முத்தாவின் மூத்த பையன் சந்தானம். அவன் பத்தாவது பரீட்சை பாஸ்

பண்ணி, கப்பலூர் தியாகராசர் மில் ஆலையில் கேன்டீனில் ஸ்டோர் கீப்பராகப் பணியில் சேர்ந்து, பின் முத்தாவே அவனுக்குக் கல்யாணமும் பண்ணி வைத்தார். இளையவன் சம்பத் பி.டபிள்யூ.டி.யில் வேலைக்குச் சேர்ந்ததும் ரமா மன்னியைக் கல்யாணம் செய்து கொண்டான். ஸ்ரீதர் மெஜுரா காலேஜில் பி.எஸ்.சி., ரசாயனம் படித்துக் கொண்டிருந்தான். கோபால் அடிக்கடி வீட்டில் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு ஓடிப் போவதும், வருவதுமாக இருந்தான்.

வீட்டில் செல்வமில்லை. பிள்ளைச் செல்வமுண்டு. பணமில்லை. சிரிப்பும், சந்தோஷமும் உண்டு.

முத்தா வேலை பார்த்த ஆபீஸ் ஜன்னல் வழியே பார்த்தால் மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடர் தெரியும். சாயங்காலம் சுகமான காற்று வீசும். மனம் சொக்க வைக்கும் மலைக்காற்று. முத்தாவின் மனம் அறிந்த பியூன் போத்தி, அவரது நாற்காலிக்கு நேர் மேலே இரும்பு கிர்டரில் இருந்து தொங்கிய நீள செவ்வகமான பங்காவின் கீழ்புறம், கேரளாவில் தன்னுடைய சொந்த ஊரிலிருந்து கொண்டு வந்த வெட்டி வேரைச் சேர்த்துக் கட்டி வைத்தான். பெரிய அகலமான கம்பி ஜன்னல்கள் வழியே மேற்குத் தொடர்ச்சி மலையின் ஆடிக்காத்து வீசும்போது, போத்தி தன் கைப்பட நீளமான மணிலாக் கயிறால் இழுத்து விடாமலே பங்கா லேசாக ஆடும். வெட்டி வேரின் வாசம் அலுவலகம் முழுவதும் நிரம்பும்.

நீர்ச்சுமை கூடிய சுகமான காற்று. சுத்தமான குடிநீர். நல்ல பணிச்சூழல். நல்ல சுபாவம் கொண்ட ஆபீஸ் ஊழியர்கள். ஏராளமான நண்பர்கள். உதவிக்கு ஓடி வந்த உள்ளூர் ராஜுக்கள் என்று முத்தா இராஜபாளையம் நகரின் இன்பமான சூழலில் வேலை பார்த்து ஏகப்பட்ட இன்கிரிமென்ட், அவார்டுகள் வாங்கி ஒரு மன்னர் போலவே வலம் வந்தார்.

வெள்ளைக்காரர்கள் போய் காங்கிரஸ்காரர்கள் வந்தார்கள். காங்கிரஸ்காரர்கள் போய் கரை வேட்டிக்காரர்கள் வந்தார்கள். முப்பத்து ஒன்பது ஆண்டுகள் ஒரே ஓட்டமாய் உருண்டோடியது.

மூத்த மனைவியின் பிள்ளைகளுக்குப் பிள்ளைகள் பிறந்தனர். அவர் கண் பார்வைக்குக் கீழே இரண்டு தலைமுறைகள் தழைத்துக் கிடந்தன.

ரிட்டயரானதும், பெட்டி, படுக்கை, மற்றும் வீட்டில் இருந்த ஒரு வண்டிச் சாமான்கள், இரண்டாம் மனைவி ருக்குமிணி, பிள்ளைகள், பெண்

பிள்ளைகள் என்று மொத்தக் குடும்பத்துடன் மதுரை ஜெய்ஹிந்த்புரம், காந்திஜி தெருவுக்குக் குடிபெயர்ந்தார் முத்தா.

இளைய பெண் ஜெயாவை கல்யாணம் பண்ணிக் கொடுக்க வசதியில்லாமல் ஒரு கோர்ட் குமாஸ்தாவிற்கு இளைய தாரமாக தாரை வார்த்துக் கொடுக்க சம்மதித்தார். ரிட்டயராகி வீட்டில் குடியிருந்தவரை ருக்குமிணி தினமும் வசைமாரி பொழிந்தாள்.

பிள்ளைகள் தலையெடுத்துக் கொண்டிருந்தார்கள். ருக்குமிணியின் மூத்த பிள்ளை சந்தானத்திற்கு மூன்று பெண்கள், இரண்டு ஆண் மக்கள் என வம்சம் கிளை படர்ந்தது. வீட்டில் எப்போதும் பணம் எனும் வஸ்து தேவைப்பட்டுக் கொண்டே இருந்தது. கும்மாளத்திற்கோ குறைவில்லை. கேலியும், கிண்டலும், சொந்தக்காரர்களின் வருகையுமாக வீட்டின் சமையலறையில் அடுப்பு அணையாமல் எரிந்து கொண்டே இருந்தது.

மூன்றாம் பிள்ளை வெங்கடரமணி அதிகாலையில் கேழ்வரகுக் கஞ்சியைக் குடித்துவிட்டு, ஒரு அலுமினிய பாத்திரத்தில் நீர்த்த மோர் சாதத்தை எடுத்துக் கொண்டு, நடை நடையாய் நடந்து மதுரை மெடிக்கல் காலேஜ் கேம்பஸில் உள்ள ஃபார்மஸி கல்லூரிக்குப் போய் விட்டு வந்தான்.

முத்தா வீட்டின் சூழலில் ஏனோ மௌனமாகிப் போனார். வீட்டின் மூலையில் பெட்ஷீட் விரித்து உட்கார்ந்து அவரது சதுர ரோஸ்வுட் மரப்பெட்டிக்குள் முகம் புதைத்துக் கொண்டார். அவருக்கு இருந்த ஒரே சொத்து அந்த ரோஸ்வுட் மரப்பெட்டிதான். பார்க்க அழகாக வழுவழுப்பாக இழைக்கப்பட்ட அந்த ரோஸ்வுட் பெட்டிக்குள் அவரது சொந்த பென்ஷன் புத்தகம், பர்ஸ், கண்ணாடிக் கூடு, கருப்பு மை சீசா, நீள நிப்புகள், பழைய பார்க்கர் பேனா, ரீடர்ஸ் டைஜஸ்ட் இதழ்கள், தபால் கார்டுகள், கவர்கள், சீட்டுக்கட்டு… இத்தியாதிகள்.

காலையில் குளித்து நெற்றியில் நாமம் இட்டுக் கொண்டதும் சாப்பிட்டு விட்டு, சீட்டுக் கட்டை எடுத்துக் கொண்டு, குத்த வைத்து குதியங்காலில் அமர்ந்து, தனக்குத் தானே விளையாடிக் கொண்டிருப்பார். மார்பில் சட்டை இருக்காது. இடுப்பில் நாலு முழ வேஷ்டி மட்டுமே. பிறகு நண்பர்களுக்கு கடிதம் எழுதுவார். பழைய ரிக்கார்டுகளைப் புரட்டிப் பார்த்து, ஏதோ நினைவில் மூழ்கி விடுவார். யாருடனும் எதுவும் பேசுவதில்லை. உச்சிப் பகல் வேளையில் நூறு திட்டு, வசவுகளுடன் ருக்குமிணி மதியச் சாப்பாட்டைக் கொண்டு வந்து வைப்பாள். அப்பொழுதும் உட்கார்ந்த

இடத்தை விட்டு எழுந்திரிக்காமல், குத்த வைத்து உட்கார்ந்து கொண்டே சாப்பிடுவார் முத்தா. அவருக்குப் பிடித்தது ரசம் சாதமும், பருப்புத் துவையலும், மதியம் சாப்பிட்டு முடித்ததும் சிறு உறக்கம். பிற்பகலில் மூன்று மணி வாக்கில் கண்விழிப்பு தட்டி எழுந்ததும், தன் வளைந்த கம்பை எடுத்துக் கொண்டு மெயின் ரோட்டில் உள்ள ராகவேந்திர விலாஸுக்குப் போய் விடுவார்.

ராகவேந்திர விலாஸில் அனுமந்தராவ், மன்னார் ராவ், ஹரி ராவ் போன்றோர் இவரது உற்ற உயிர் நண்பர்கள்.

- ‘வாங்கோ முத்தா. இங்க உட்காருங்கோ. ஒரு அஞ்சு நிமிஷம் பொறுத்துக்கோங்கோ. டிபன் ரெடியாயிடும் ‘ என்பார் கல்லாவில் உட்கார்ந்திருககும் ஓனர் அனுமந்தராவ்.

முத்தாவுக்கென்று முதல் ஏடு எடுத்த சூடான உருளைக்கிழங்கு பஜ்ஜியும், ரவா கேசரியும், நல்ல சூடான பில்டர் காபியும் தனியாகக் கொண்டு வந்து தருவார்கள். சாப்பிட்டு முடித்து, பாண்டி கடையில் மூக்குப் பொடி, வெத்திலை, பாக்கு, அங்கு விலாஸ் பன்னீர் புகையிலை வாங்கிக் கொண்டு, நண்பர்கள் வீட்டுக்குப் போய் விட்டு வீடு திரும்ப மணி ஆறாகி விடும். பிறகு மீண்டும் சீட்டுக்கட்டு எடுத்துக் கொண்டு தானே தனியாய் விளையாடுவார். அப்பொழுதும் யாருடனும் சேர்ந்து விளையாடுவதில்லை. யாருடனும் பேசுவதில்லை. இரவு எட்டு மணி வரை மூக்குக்கண்ணாடியைப் போட்டுக் கொண்டு இந்து பேப்பர் வாசிப்பார். பிறகு இரவு பலகாரம். வாய் கொப்பளித்து விட்டு பெட்ஷீட்டை விரித்து விட்டால் காலை ஐந்து மணிக்குத்தான் எழுந்திருப்பார்.

ரிட்டயரான பிறகு, கிட்டத்தட்ட இதே ரீதியில் இறுதிக்காலம் வரை ஓட்டி விட்டார். நோய் நொடி என்று படுத்துக் கொண்டது கிடையாது. ஆனால், உடல் மெலிந்து, மெலிந்து துரும்பாய்ப் போய் விட்டார். உடலில் ஒரு இடத்திலும் கிள்ளுவதற்குக் கூட சதை இல்லை. அவருடைய குழி விழுந்த கண்களும், தொங்கிப் போன கன்னமும், அவரைப் பார்க்கும் எவருக்கும் அவர் மீது கழிவிரக்கத்தைத் தேடித் தரும். அவர் இருந்த காலம் வரை ருக்குமிணியின் முதல் இரண்டு பிள்ளைகளுக்கு கல்யாணம் பண்ணிப் பார்த்து விட்டார். பிள்ளைகளை ஒரு போதும் அவர் கடிந்து பேசியதில்லை. அவர்களாகவே படித்து மேலே வந்து விடுவார்கள் என திடமாக நம்பினார்.

முத்தாவுக்கு இருந்த ஒரே வருத்தம், இரண்டாவது மகள் ஜெயாவுக்கு நல்ல சீதனம் கொடுத்து முதல் தாரமாக ஒரு மாப்பிள்ளைக்குக் கைப்பிடித்துத் தரவில்லையே என்பது தான். அந்த வருத்தம் அவருக்குக் கடைசி வரை இருந்தது. சப்-ரிஜிஸ்திரார் என்ற ராஜ உத்தியோகம் பார்த்ததில் அவருக்கு மிஞ்சியது ஒரு ரோஸ்வுட் சதுரப்பெட்டி தான். தன் சட்டையில் பெரிய பை வைத்துத் தைத்துக் கொள்ளாதது அவரது தவறுதான்.

ஜெய்ஹிந்த்புரம் காந்திஜி தெரு உண்மையில் ‘பாரத விலாஸ் ‘ தான். சகல வருணத்தாரும் சங்கமித்த ஒருமை. எப்பொழுதும் ஜன சந்தடி அதிகம் உள்ள தெரு. காலையில் ஐந்து மணிக்கு வெள்ளாடுகளைக் கொண்டு வந்து, அவற்றின் பாலை இளஞ்சூட்டில் கறந்து சீக்காளிகளுக்கு விற்பனை செய்வதில் இருந்து, அந்தத் தெருவில் ஒரு தினத்தின் துவக்கம் உதயமாகும். பிறகு தோட்டிகளின் துப்புரவு வேலை, பால்காரர்களின் மணியோசை, பேப்பர்காரனின் குரல்… இப்படியாக பொழுது புலரும். சதா மக்கள் ஆரவாரம். ஜெய்ஹிந்த்புரம், காந்திஜி தெரு எப்போதும் உயிர்த்துடிப்போடு இருக்கும். அந்தத் தெருவாசிகள் நெஞ்சில் விகல்பமற்றவர்கள். கல்மிஷம் இல்லாதவர்கள். வஞ்சனை இல்லாத பிறவிகள். முத்தாவைப் போலவே அந்த காந்திஜி தெருவாசிகளும்…

ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அல்லது அசந்தர்ப்பத்தில், காந்திஜி தெருவை விட்டு விட்டு, அதற்கு மேற்குப் பக்கம் இருந்த தீனதயாள் இரண்டாம் தெருவில், இரட்டை வீடுகள் ஒட்டிக் கட்டப்பட்ட காம்பவுண்டு சுவர் உள்ள வீட்டிற்கு இடம் பெயர்ந்தார் முத்தா. கூடவே அவர் குடும்பமும். அங்கு புதிய வீட்டில் குடிபுகுந்த சில மாதங்களுக்குள் அவர் திருநாடு அலங்கரித்தார்.

முத்தாவின் பத்து நாள் ஈமக்காரியங்கள் யாவும் வைகை நதிக்கரையோரம் உள்ள டி.வி.எஸ். தோப்பில் நடைபெற்றன. பிச்சை வாத்தியார் தான் வீட்டின் எல்லா நல்லது கெட்டது காரியங்களுக்கும். பத்தாவது நாள் அன்று நெருங்கின தாயாதி உறவினர்கள் டி.வி.எஸ். மண்டபத்தில் பந்தியில் அமர்ந்தபோது, சீமானி அங்கு வந்த கூட்டத்தைப் பார்த்துப் பிரமித்து விட்டார். முத்தாவின் நெருங்கின நண்பர்கள், உறவினர், ஒன்று விட்ட மாமா, மச்சினர் என்று ஒரு பெரும் பட்டாளமே பத்தாம் நாள் பந்தியில் சாப்பிட அமர்ந்தது. மூன்று தடவை அரிசி போட்டு அண்டாவை அடுப்பில் ஏற்ற வேண்டியிருந்தது.

இந்த பெருத்த உறவினர் கூட்டத்தில் தான் ராஜாமணியின் மூத்த பிள்ளை ராஜப்பா வேப்ப மரத்தடியில் நின்று கொண்டு எல்லோருடனும் சகஜமாகப் பேசிக் கொண்டு இருந்தான். பி.ஏ., ஆங்கிலம் நாலாவது அட்டெம்ப்டில் பாஸ் பண்ணி முடித்து விட்டு, இடைவிடாமல் சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுதிக் கொண்டிருந்த பட்டதாரி கஜினி முகம்மது அவன். முத்தாவின் மூத்த தலைப் பேரன். வேலை வெட்டி இல்லாமல் சுற்றித்திரிந்து பாம்பே போய், அங்கும் சாப்பாடு கிடைக்காமல் ஒரு சர்ச் பாதிரியாரின் கருணையில் தேவாலயத்தில் நாள் தோறும் சாப்பிட்டுக் கொண்டு, வேலை தேடி, எதுவும் கிடைக்காமல், கடைசியில் சுவிசேஷ பிரச்சாரகராக மாறியவன். அவன் வாயால் முத்தாவின் புகழ் பாடக் கேட்ட சொந்தக்காரர்கள் கூட்டம், மெய் மறந்து, உணர்ச்சிவசப்பட்டு கண்ணீர் சொரிந்த காட்சி ஏதோ நேற்று நடந்தது போல் இருக்கிறது.

பத்தாம் நாள் சரம காரியம் முடிந்து, முத்தா விட்டுச் சென்ற பொருட்களை எல்லாம் துண்டாக எடுத்து ஒதுக்கி வைத்தார் சம்பத் மாமா. முத்தா பயன்படுத்திய மங்கலான இள மஞ்சள் நிறத்தாலான எட்டு முழ வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் யாவையும் என்ன செய்யலாம் என்று பிச்சை வாத்தியாரிடம் சம்பத் மாமா கேட்டார்.

- ‘ஏண்டா சம்பத்! அதெல்லாம் முத்தா உடுத்திண்டது. அது எதையும் வீட்டுக்கு எடுத்திண்டு போகாதே. இதோ இந்த ஓடுற ஆத்துல விட்டுரு!’ என்று அறிவுறுத்தினார் பிச்சை வாத்தியார்.

முத்தாவின் எல்லாத் துணிமணிகளும் ஒரு தகர டிரங்க் பெட்டியில் இறுக்கமாக அடைக்கப்பட்டிருந்தது. அவர் எப்போது உடுத்திக் கொண்டதோ!?!

சம்பத் மாமா தகர டிரங்க் பெட்டியைத்திறந்து, நைந்து போன அந்தப் பழைய துணிமணிகளை எல்லாம் எடுத்து, முழங்காலுக்கு மேலே ஓடிய வைகை ஆற்றின் நீரிலே விட்டார்.

அந்தத் துணிக் குவியல் மொத்தமாகத் திரண்டு, பின் பிரிந்து மெதுவாக மிதந்து சென்றது. அதன் பின்பக்கம் சிவப்பு, பச்சை ஜரிகை வைத்த சுருண்ட அங்கவஸ்திரம் மிதந்தபடி சென்றது. வைகை ஆற்றின் நீரை விட்டு, மணலில் கரையேறிய சம்பத் மாமா ஒரு கணம் திரும்பி நதியில் ஓடிய துணிக்குவியலைப் பார்த்தார்.

நதியின் சுழித்து ஓடிய நீரோட்டத்தில், ஏதோ ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் தன் நாடு, நகரத்தையெல்லாம் இழந்து விட்டு, தன் கிரீடத்துடன் தண்ணீரில் மல்லாந்து கொண்டு மிதந்தபடியே சென்றதைப் போல அவருக்குப் பிரமிப்பு தட்டியது.

--------

# 5. காராமணி

- ‘அப்பா, அங்க இருக்கே, அது வாங்கித் தாப்பா!

ஸ்ரீகாந்த் என்னிடம் கோரிக்கை விடுத்தான். ஸ்ரீகாந்தின் கைவிரல் நீட்டப்பட்ட திசையில், பலசரக்குக் கடையில் ஒரு மெல்லிய குறுக்குவாட்டுக் கம்பியில் நீளமாய் பொட்டல வரிசைகள் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருந்தன.

- ‘எது வேணும்? ‘

- ‘அதோ , அந்த சிப்ஸ் பாக்கெட். அது ரொம்ப டேஸ்ட்டா இருக்கும்ப்பா. எனக்கு அது தான் வேணும்! ‘

- ‘வேணாங்க. அது ரொம்ப காரம். சிவப்பு மிளகாய் போட்ட காரம். நாக்கு எரியும். வேற எதாவது கேளுங்க’.

- ‘ம்ஹூம். எனக்கு அது தாம்ப்பா வேணும்! ‘

- ‘வேணாங்க. சொன்னாக் கேளுங்க. இது ரொம்பக் காரம். சாப்பிட்டா வயிறு எரியும். வேற ஏதாவது வாங்கித் தரவா? இந்த பிஸ்கட், இந்த ரஸ்க், இந்த கடலை மிட்டாய், ரஸ்தாளி வாழைப்பழம் வேணுமா? இதுல எதாவது வாங்கிக்கோங்க. ‘

- ‘ம்ஹூம். மாட்டேன். எனக்கு எதுவும் வேணாம். அந்த சிப்ஸ் பாக்கெட், பொட்டேட்டோ சிப்ஸ். அது தான் வேணும்! ‘.

ஸ்ரீகாந்த் முரண்டு செய்யத் தொடங்கினான். எனக்கு அவனை சமாதானப்படுத்த வழி எதுவும் தெரியவில்லை. எங்கள் பட்டிமன்றத்தை அருகில் இருந்த கடைக்காரர் கவனித்துக் கொண்டிருந்தார்.

அந்த உருளைக்கிழங்கு சிப்ஸ் பொட்டலத்தை நான் மட்டமாகப் பேசியது குறித்து அவருக்கு சங்கடம் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்தக் கடைக்காரர் என் நல்ல நண்பர். இருபது வருடப்பழக்கம். புன்னகை மாறாத முகம். சிவந்த நிறம். விபூதி துலங்கும் நெற்றியில் அவர் முகத்தைப் பார்த்தாலே குளிர்ச்சி தான்.

எங்கள் பட்டிமன்றத்தைக் கவனித்து விட்டு, அவர் ஒரு நமட்டுச்சிரிப்பு சிரித்தார். அந்தப் புன்னகை, அவரது டிரேட் மார்க் புன்னகை.

ஸ்ரீகாந்த் இப்போது என்னை மீண்டும் நச்சரிக்கத் தொடங்கினான். அவன் கைகாட்டிய திசையில் தொங்கிக் கொண்டிருந்த சிப்ஸ் பாக்கெட்டைப் பார்த்தேன். அதில் உதிர்ந்த உருளைக்கிழங்கு சிப்ஸ் கீழே விழுவது போலவும், அதில் சிவப்பான மிளகாய்ச் சாறு சேர்வது போலவும் புகைப்படம் அச்சிடப்பட்டிருந்தது. அந்த டிரேட் மார்க் பெயருக்குக் கீழே ‘ரெட் பெப்பர்ஸ், அரிஸோனா, யு.எஸ்.ஏ.’ என்று ஆங்கிலத்தில் பொடி எழுத்துக்களில் தெள்ளத் தெளிவாய் அச்சிடப்பட்டிருந்தது.

சிப்ஸ் பாக்கெட்டின் உறை பளபளவென பொன் மஞ்சள் நிறத்தில் மின்னியது. அந்த உறையின் கீழே, ஒரு குள்ள மனிதன் கோட், சூட் மற்றும் உயரமான தொப்பி அணிந்திருந்தான். அவனது உடைகளில் வெள்ளை, நீலம், சிவப்பு, பட்டைக்கோடுகள் தெரிந்தன. அத்துடன் ஊதா நிற நட்சத்திரங்களும் அவனது சட்டை, தொப்பியை அலங்கரித்தன. அந்தக் குள்ள மனிதன் சிப்ஸ் பாக்கெட்டை சிபாரிசு செய்வது போல, ஒரு கையை உயர்த்திக் காட்டிக் கொண்டிருந்தான்.

ஒரு சிதறிய வட்டத்திற்குள் இந்த சிப்ஸ் பாக்கெட் விலை ரூ. 10. என்று அச்சிடப்பட்டிருந்தது.

- ‘வேண்டாங்க. சொன்னாக் கேளுங்க. வேற எதாவது. .... பனங்கற்கண்டு வாங்கிக்கோங்க. ரொம்ப இனிப்பா இருக்கும் ’.

- ‘மாட்டேன். சிப்ஸ் தான் எனக்கு வேணும்! ’.

இப்போது கடைக்காரர் அரு. ராமநாதன் குறுக்கிட்டார்.

- ‘சார், பரவாயில்லை சார். வாங்கிக் கொடுங்க சார். பையன் பிரியப்பட்டுக் கேக்கறான்ல. போனாப் போகுது. இப்ப எல்லாக் குழந்தைகளும் இதைத் தான் விரும்பி சாப்பிடுறாங்க. இது இப்ப ரொம்ப ஃபேஷன் சார். வெறும் பத்து ரூபா தான்’ என்று பலசரக்குக் கடைக்காரர் சிபாரிசு செய்தார்.

- ‘ரூபாய்க்காக இல்ல சார். இது வெறும் உருளைக்கிழங்கு மட்டுமல்ல. இதுல ரொம்ப கெமிக்கல்ஸ் யூஸ் பண்ணியிருக்காங்க. அதனால் இதைச் சாப்பிட்டா, குடல் அல்சர் வருமாம். அதனால் தான் இதப் போயி குழந்தைக்கு வாங்கித்தரணுமான்னு யோசனையாயிருக்கு’.

- ‘அப்படிப் பார்த்தா இப்ப இருக்கற காலத்துல எதுவுமே சாப்பிட முடியாது சார். எதுல தான் ரசாயனப் பொருள் இல்ல. சொல்லுங்க சார்! ‘ கடைக்காரர் என்னுடன் விவாதத்துக்கு வந்தார்.

பொதுவாக வியாபார இடங்களில் நான் விவாதம் செய்வதில்லை. அது யாருடைய வியாபாரத்தையாவது பாதிக்கும் என்பதால் நான் எந்தப் பொருளையும் குறித்து ஒரு கடையில் நின்று கொண்டு விமர்சிப்பதில்லை.

என்னுடைய ஊரில் உள்ள பலசரக்குக் கடைகள் மிகச்சிறியவை. அவைகளில் வியாபாரம் தொடர்ந்து நடப்பதே பெரிய விஷயம். ஒரு நாளைக்கு நூறு ரூபாய் அல்லது இருநூறு ரூபாய் நடந்தாலே அது கூடப் போதும் என்று திருப்திப்பட்டுக் கொள்கிற பல அப்பாவிகள் சிறு கடைகள் வைத்து எங்கள் ஊரில் வியாபாரம் செய்கின்றனர். ஒரு பத்து ரூபாய் சிப்ஸ் பாக்கெட் குறித்து ஏதாவது நான் பிரசங்கம் செய்து வைக்க, அதன் எதிர்விளைவு ஏதாவது இருக்கத்தான் செய்யும்.

ஸ்ரீகாந்த் இப்போது தன் குரல் சாரீரத்தை சுருதி கூட்டினான்.

- ‘அப்பா சிப்ஸ்ஸு’.

இப்போது குரலில் ஸ்தாயி கூடியது.

- ‘அப்பா, சிப்ஸ்ஸ்... வாங்கித் தா’.

- ‘ஏன் ஸ்ரீகாந்த், இப்படி அப்பாவைப் படுத்தறீங்க?’

- ‘சிப்ஸ் ரொம்ப நல்லதுப்பா... சிப்ஸ்ஸ் ‘.

இப்போது குரலில் ஸ்வரம் ஏறியது. இது துவக்கம். இதை விட்டால் அடுத்தது பல்லவி என்று அழ ஆரம்பித்து விடுவான். பிறகு அனுபல்லவி கூடவே வரும்.

இப்போதே தரையில் அவன் கால்களைப் பார்க்கிறேன். அவை நிலை கொள்ளாமல் ‘லெ.ஃ.ப்ட் ரைட், லெ.ஃ.ப்ட் ரைட் ‘ என்று உயர்ந்து உயர்ந்து தாழ்கின்றன. அடுத்து அவன் ஓங்கிய குரலில் அழ ஆரம்பித்து விடுவான். பிறகு அவனை யாராலும் சமாதானம் பண்ண முடியாது, எதிர் வீட்டு நண்பன் கோகுலைத் தவிர.

- ‘அப்பா, சிப்ஸ்’.

இப்போது குழந்தையின் குரல் ஒரு மாதிரி இருந்தது. ஸ்ரீகாந்த் என் ஒரே பிள்ளை. வயது ஏழு. ரயில்வே ஸ்டேஷன் ரோட்டில் உள்ள மெட்ரிக்குலேஷன் பள்ளியில் இரண்டாம் வகுப்பில், ஒவ்வொரு தேர்விலும் பத்தாவது ரேங்குக்குள் ஒரு ரேங்க் வாங்கும் மாணவன். அவன் என்ன கேட்டாலும் நான் இல்லையென்று சொல்வதே இல்லை. இரண்டு ரூபாய் விஷயத்தில் ஆரம்பித்து, இருநூறு ரூபாய் விஷயம் வரை அவன் கோரிக்கை நீளாத விஷயமே இல்லை.

இனி மேலும் ஸ்ரீகாந்தை சமாதானம் பண்ண வழியில்லை. வேறு என்ன பொருள் கேட்டாலும் வாங்கித்தர தயாராய்த் தான் இருந்தேன். ஆனால், ஸ்ரீகாந்த் நீட்டிய கையை மடக்கவில்லை. எனக்கு அச்சூழலில் வேறு வழி தெரியவில்லை. என் விரல்கள் சட்டைப் பையில் நுழைந்தன.

- 'ஸ்ரீகாந்த், சொன்னாக் கேளுங்க. வீட்டுக்குப் போய், பிரிச்சுச் சாப்பிடுங்க'.

- 'சரிப்பா'.

அந்தப் பொன் மஞ்சள் நிற உறையிட்ட சிப்ஸ் பாக்கெட் இப்போது என் பையில் இருந்தது. பிற மளிகைச் சாமான்கள் அதன் கீழே தங்கியிருந்தன.

இது உருளைக்கிழங்கு துருவல். ஏதோ ஒரு எண்ணெயில் வறுத்து, உப்பும் மிளகாய்த்தூளும் தூவி, சோடியம்-பை-கார்பனேட் எனும் சமையல் சோடா, சோடியம் குளூட்டோமேட் எனும் உணவு பதனப் பொருள், பல ரசாயன வர்ணங்கள், இதர பதனப் பொருட்கள் கலந்த ஒரு கலவை.

என் கல்யாணத்தில், மத்தியான சாப்பாட்டு பந்தியில் அமர்ந்திருந்த போது, முதன் முதலாய் நறுக்கிய வாழைப்பழத் துண்டுகள் மற்றும் இனிப்பு கொண்டு வந்து வைத்தார்கள். பிறகு, மிளகாய்ப் பொடியில் புரட்டிய வாழைக்காய் சிப்ஸ் கொண்டு வந்து இலையில் போட்டார்கள். பார்த்ததும் நாவில் எச்சில் ஊறியது. இதோ இந்த சிப்ஸ் பாக்கெட். உருளைக் கிழங்கின் துருவல். இது இக்கால குழந்தைகளின் அபிமானத்திற்குரிய நொறுக்குத் தீனி.

நொறுக்குத்தீனி செய்வதில் அலமேலுப் பாட்டியை அடித்துக் கொள்ள என் ஊரிலேயே ஆள் கிடையாது. அதிலும் சாயங்காலப் பொழுதில்,

ஏதாவது சாப்பிடத் தோன்றினால், அந்நேரம் பாட்டியே ஏதாவது எடுத்துக் கொண்டு வருவாள். நாம் எதுவும் கோரிக்கை வைக்க வேண்டாம்.

சாயங்காலப் பொழுதுகளில் அவள் எனக்குச் சாப்பிடத் தந்த பொருட்களில் மிகச் சிறந்தது காராமணி என எண்ணுகிறேன். காராமணி, ஒரு அற்புதமான, ருசியான உணவுப் பண்டம். நொறுக்குத் தீனிகளின் மகாராஜா அது தான்.

கேழ்வரகு, தட்டைப்பயறு, மொச்சைப்பயறு, நிலக்கடலைப் பருப்பு, கொஞ்சம் கொள்ளு, பாசிப்பயறு மற்றும் இதர பயறு வகைகள், தானியங்களை தண்ணீரில் ஒரு நாள் ஊற வைத்து, பிறகு சுத்தமான வெள்ளைத் துணியில் (அதாவது தாத்தாவின் வேஷ்டியில்) முளை கட்டி, பிறகு வெய்யிலில் காய வைத்து, லேசாக பொன்னிறமாக வறுத்து, உப்பும், மிளகாய்ப் பொடியும் கலந்து, நன்கு கிளறி, பிறகு ஒரு பெரிய பித்தளைத் தூக்குவாளியில் எடுத்து வைத்துக் கொள்வாள். சாயங்காலம் ஆனதும், ஒரு குழிந்த பாத்திரத்தில் இதை எடுத்து வைத்துக் கொண்டு, வாயில் போட்டுக் கொண்டு அரவை செய்து கொண்டிருப்பாள். எனக்கும் இந்த நளபாக நொறுக்குத் தீனியில் பங்கு உண்டு. ஒவ்வொரு சாயங்காலமும் எப்போது வரும் என காத்திருப்பேன். நான் கேட்காமலேயே இந்த நொறுக்குத்தீனி எனக்கு வந்து விடும். நான் இதைச் சாப்பிட ஆரம்பித்ததும், அலமேலுப்பாட்டி சமையற்கட்டிற்குள் நுழைந்து விடுவாள். அங்கே கரியிட்ட இரும்பு அடுப்பில், பால் பாத்திரத்தை ஏற்றிக் காபி தயார் செய்ய ஆரம்பித்து விடுவாள்.

காபி போடுதல் என்றால், எங்கள் ஊர் செட்டியார் பலசரக்குக் கடையில் உள்ள காப்பித்தூள் ரகங்களிலேயே எது மிக மலிவானதோ அது தான் காப்பி தயாரிக்கப் பயன்படுத்தப்படும். அய்யனார் காபி, ஆஞ்சநேயர் காபி, வடிவேலர் காபி, சிவம் சாமி காபி, என்று இன்ன பிற டிரேட் மார்க் சட்டங்களால் பாதிக்கப்படாத காப்பி நிறுவனங்கள் விநியோகிக்கும் மிக மலிவான காப்பித் தூளில் தான் காப்பி போடுவாள் டிகாக்ஷனை ஒரு பாத்திரத்தில் கொதிக்க வைத்து விட்டு, ஒரு சதுரத் துணியில் வடிகட்டுவாள். அவள் போடும் காபி அவ்வளவு ருசியாக இருக்கும். வாயில் வைத்து டம்ளரை உறிஞ்சுவது கூடாது. அது எச்சில் என்பாள்.

- ‘அன்னாக்க வாத்துக்கோ’ என்பாள்.

‘உதடுகளில் படாமல் காபி தம்ப்ளரை உயர்த்தி நேரே வாயில் ஊற்றிக் கொள் ‘ என்று அதற்குப் பொருள். காப்பி சாப்பிட்டு முடித்ததும், சாயங்கால நேரத்தில் வெளியே புறப்பட்டு விடுவேன். பட்சணங்கள் செய்வதில் பாட்டிக்கு நிகர் பாட்டி தான். தேங்காய் இட்ட அப்பம் செய்தாள் என்றால், தெற்கு மாட வீதியில் உள்ள வீடுகளில் உள்ள யாவருக்கும் விநியோகம் உண்டு. வீட்டுக்கே வந்து உரிமையோடு கேட்டு, வாங்கிக் கொண்டு போவார்கள். சாதாரண அப்பம் தான். அரிசி மாவில் வெல்லம் கரைத்தது தான். அதில் தேங்காயை நறுக்கிப் போட்டு, குறிப்பிட்ட பக்குவத்தில் நல்லெண்ணெய்யில் பொரித்து எடுப்பதில் தான் அவள் சாமர்த்தியம் இருந்தது. எல்லோருக்கும் தெரிந்த ஒன்று, அவள் கைப்பக்குவத்தில் வேறு ஒன்றாக மாறும். அந்த தேங்காய் அப்பத்தின் வாசம், அதன் திவ்விய நறுமணம், ஒரு பரம ரகசியம். பிற்பாடு, ஒரு நாள் அவள் சமையல் செய்யும் போது அருகில் நின்று அவளைக் கவனித்தேன்.

புது நல்லெண்ணையை இலுப்பச் சட்டியில் வார்த்து, அதை நன்கு சூடுபடக் காய்ச்சியதும், பிறகு நாட்டு வாழைப்பழத்தை எடுத்து உரித்து, அதில் போட்டு, அதை நன்கு பொரித்து எடுத்து விட்டால், நல்லெண்ணையின் கசப்புத் தன்மை போய் விடும். அந்த வாழைப்பழம் நன்கு பொரிந்து விடும். பிறகு, அதை எடுத்துப் போட்டு விட்டால், அதற்கு அடுத்து அந்த எண்ணையில் எது வேண்டுமானாலும் பொரிக்கலாம். அதன் ருசியே தனி. அலமேலுப் பாட்டியின் பொரி விளங்காய் உருண்டை ருசி, ஸ்ரீவில்லிபுத்தூரிலும், அதற்குத் தெற்கே உள்ள பல கிராமங்களிலும் பிரசித்தி.

புழுங்கலரிசி, கோதுமை, கேழ்வரகு, சோளம், பொரிகடலை, வெல்லம் இவைகளை வைத்து அவள் செய்யும் பொரி விளங்காய் உருண்டை, இக்கால சமையல் கலை பட்டப்படிப்புகளில் பாடமாகப் போதிக்கப்படாத ஒன்று. திரட்டுப் பால், சீரகம் போட்ட முறுக்கு, தேன்குழல், ஒக்கோரை, நெய் மைசூர்பாகு, சீனி லட்டு, வெல்லப்பாகு இட்ட கேப்பைத் தோசை, அக்காரவடிசல், மோதகம், கல்கண்டு சாதம், தவல் வடை… அவள் சமைத்துத் தராத தின்பண்டங்களே இல்லை.

கொல்லைப்புறத்தில் கட்டியிருந்த பசு மாடு, கன்று ஈன்றால் முதலில் வரும் சீம்பாலை எடுத்துக் காய்ச்சி, சீனியிட்டு திரட்டுப்பால் செய்து தருவாள். அதன் ருசி இன்னமும் நினைவில் இருக்கிறது.

தின்பண்ட பட்சணங்கள் தான் என்றில்லை. அவள் செய்த சமையலே தனி ரகம் தான். அந்த சமையலை அவள் எல்லோருக்கும் விளம்பரம் செய்து, தன் தலையில் கிரீடம் வைத்துக் கொள்ளவில்லை. அவ்வளவுதான்.

அலமேலுப் பாட்டி சமையலுக்குப் பயன்படுத்தியது வெறும் குமிட்டி அடுப்புதான். எரிக்க பருத்திமார் கட்டு. ஒவ்வொரு வருஷமும் பருத்தி வெள்ளாமை முடிந்ததும், பருவகாரன் மாரியப்பன் கட்டுக்கட்டாய் பருத்திமார் கட்டுக்களைக் கொண்டு வந்து வீட்டுக் கொல்லைப்புறத்தில் வைத்து விட்டுப் போவான்.

ஆறு மாசங்களுக்கு அவளுக்கு அது போதும். அது தீர்ந்ததும் புளியமர விறகு. பருத்திமார் சாமானியத்தில் எரியாது. ஒரு தடவை பற்ற வைத்து விட்டால், அது தரும் உஷ்ணத்தில், தொடர்ந்து பருத்திமாரை அடுப்பிற்குள் சொருகிக் கொண்டே இருக்க வேண்டும். சீமத்தண்ணி எல்லாம் அலமேலுப் பாட்டிக்கு விலையுயர்ந்த ஆடம்பர சமாச்சாரங்கள். பருத்திமாரில் சமையல் செய்தால் அதில் உண்டாகும் சமையலே தனி ருசி தான். சாதம் வடிப்பது வெண்கலப் பானையில். உருண்ட வெண்கலப் பானையில் சமையல் செய்ததும், அது கரியினால் அடிப்பிடித்துப் போகும். அதைத் துணியினால் எடுத்து வந்து அதன் மேல்பரப்பில் வெந்த பருப்பு சேர்த்து, பிறகு கூடத்தில் மூலையில் இருக்கும் கோயில் ஆழ்வான் சந்நிதி முன்னால் வைத்து, அதன் மரக்கதவுகளைக் திறந்து, உள்ளே இருக்கும் விஷ்வக்சேனர், சூர்யாதேவி தாமிர உருவங்களுக்கும், பெரிய தாத்தாவின் மரத்தாலான பாதக்குறடுகளுக்கும் நைவேத்தியம் செய்து விட்டு, பிறகு தான் எனக்கு மதியச் சாப்பாடு போடுவாள்.

காலை பெரும்பாலும் பழையதும், மொச்சைப் பயறு இட்ட கெட்டியான குழம்பும் கிடைக்கும். தாமரை இலை அல்லது வாழை இலைகள் எப்போதும் ஒரு மூலையில் கோணிச் சாக்கில் சுருட்டி வைக்கப்பட்டிருக்கும். காய்ந்து போன வாழை இலையை எடுத்து விரித்துக் கொண்டு, அவள் முன்னே உட்கார வேண்டும். அந்த இலையில் உலகில் உள்ள அத்தனை மேடு பள்ளங்களும் இருக்கும். அதில கல்சட்டியில் வைக்கப்பட்டிருக்கும் முந்தின நாள் பழையதை எடுத்துப் போடுவாள். பிறகு ஈயப்பாத்திரத்தில் இருக்கும் தயிரைக் கடைந்து, புளித்த மோரை எடுத்து, அந்த பழைய சாதத்தின் தலையில் ஊற்றுவாள். புளித்த மோர், பழைய சாதத்தில் விழுந்ததும், கண்மாயை உடைத்து, மறுகால் ஓடும் மழைத்தண்ணீர் போல

அங்குமிங்கும் மோர் ஓடும். அதை அங்குமிங்கும் ஓடாதபடி சாதத்தால் அணை கட்டுவதற்கு ஒரு இஞ்சினியரின் சாமர்த்தியம் கட்டாயம் வேண்டம்.

இலையின் ஓரத்தில் கொஞ்சம் கல் உப்பும் வைப்பாள். இதையெல்லாம் பிசைந்து, அது கசங்கிய, பழைய பழுப்பு நிற வாழையிலையின் விளிம்புகளைத் தாண்டி, எல்லை கடந்து, அந்நிய தேசத்திற்குள் புகுந்து விடாதபடி கைகளால் சாதத்திற்கு எல்லைப் பாதுகாப்பு செய்ய வேண்டும். அது சாப்பிடுவதற்கு ஒரு ராஜதந்திரம் வேண்டும். சாதமும், மோரும் குழைத்து வைத்துக் கொண்டு, அவள் முகத்தைப் பார்த்தால், உடனே புரிந்து கொண்டு, கையில் ஒரு சிரட்டையில் கொண்டு வந்திருக்கும் தேங்காய்த் துவையலை எடுத்து இலையின் ஒரு மூலையில் போடுவாள். புளி தேங்காய், மிளகாய், பருப்புக் கலவையில் அரைத்து, கார்ப்பும், புளிப்பும், காரமும் கூடிய ஒரு பல்சுவைக் குவியல் அந்த துவையல். அது உப்பின் கார்ப்பா அல்லது புளிப்பா என்று நாவால் ருசித்து முடிவு செய்தவற்குள், மிளகாயின் காரம் முந்திக் கொண்டு விடும். இந்தப் பழைய சாதத்திற்கு வைணவர்கள் இட்ட பெயர் 'மடிப்பழையது'.

காலையில் மடியாய் குளித்து விட்டு, உத்திரத்திலிருந்து குறுக்காய்த் தொங்கும் மூங்கில் கம்பிலிருந்து ஒரு வேஷ்டியை, ஒரு மூங்கில் குச்சியால் கெந்தி எடுத்துக் கொண்டு, அதை உடுத்திக் கொண்டு, நெற்றியில் திருமண் இட்டுக் கொண்டு, இடுப்பில் ஒரு உத்தரியத் துண்டை இறுக்கிக் கட்டிக் கொண்டு, வேகம் வேகமாக ஆண்டாள் கோவிலுக்குள் விஸ்வரூப தரிசனத்திற்குப் போய், அங்கிருக்கும் கோஷ்டியோடு சேர்ந்து விட வேண்டும்.

அங்கு விஸ்வரூப தரிசனம் முடிந்து வீடு திரும்பியதும், மேற்சொன்ன 'மடிப்பழையது' தான். பாட்டியின் மடிப்பழையது. அந்தக் கல்சட்டியில் ஊற வைத்த பழைய சாதத்தின் குளிர்ச்சியும் அதன் ருசியும். அதற்கு ஈடாக வேறெதுவும் சொல்ல முடியாது. மதியம் சாப்பிட ஒரு வேளை அதிர்ஷ்டம் இருந்தால், நல்ல வாழை இலையில் சாதம் கிடைக்கும். நல்ல வாழை இலை, பருவக்காரன் மாரியப்பனின் கைங்கரியத்தில் தான் இருந்தது.

தரையில் அமர்ந்ததும், நல்ல நுனி வாழை இலையில் நீர் தெளித்து, வாழைக்காய் பொரியல், கொத்தவரங்காய் அல்லது சேப்பங்கிழங்கு பொரியல், வயக்காட்டுப் புடலங்காயில் செய்த பருப்பு போட்ட கூட்டு பரிமாறி,

பின்னர் வெண்கலப் பானையில் செய்த சாதத்தை எடுத்து ஒரு சிப்பலில் வைத்துக் கொண்டு, இலையில் போட்டதும்,

- ‘போதுமா? இலையைப் பார்த்துச் சொல்லு !’ என்பாள்

சூடாய் ஆவி பறக்கும் பச்சரிசி சாதத்தில் பருப்பு இட்டு, நெய் விட்டதும், வாழை இலையிலிருந்து மேலெழும்பும் சூடான ஆவி நாசியைத் துளைக்கும். அந்த மணம் திவ்வியமான சமையல் மணம். பாட்டியின் கைப்பக்குவ மணம். நாசி வழியே நுழையும் அந்த மணம், கண்களைச் செருக வைக்கும். கடலைப்பருப்பும், நறுக்கிய கத்தரிக்காயும், பச்சை மிளகாயும் இட்ட குழம்பு சேர்த்து சூடான சாதத்தை கவளம், கவளமாக விழுங்க, விழுங்க, நாவில் நீர் ஊறி, அதன் ருசி மேலும் மேலும் நிறைய கவளங்களை உருட்டி உள்ளே அனுப்ப வைக்கும். ‘சாற்றமுது’ என்றால் வைணவ அகராதியில் ‘ரசம் ‘ என்று அர்த்தம். குறுமிளகும், தக்காளியும் இட்ட அந்த ரசத்தை வாழை இலையில் அங்குமிங்கும் ஆறு போல ஓட விடாது, விரல்களால் அணைத்து எடுத்து, சாதத்துடன் சேர்த்து வாய்க்குள் ‘சர், சர்ரென்று’ உறிஞ்சித் தள்ளுவது ஒரு தனிக்கலை. அப்படிச் சாப்பிடத் தனித்திறமை வேண்டும். தட்டில் ரசம் சாப்பிடுவது எளிது. எடுத்து உறிஞ்சி விடலாம். வாழை இலையில் அதே சாற்றமுதை உறிஞ்சி, சுவைத்தல் தனி விதம்.

அலமேலுப் பாட்டி சமையலில் சாற்றமுதுக்கு தனி இடம் உண்டு. இலையில் ஊற்றியதும், அதை உறிஞ்சிச் சாப்பிடும் யாவரும் சப்புக் கொட்டிச் சாப்பிடுவதைப் பார்த்திருக்கிறேன். சாப்பிடுபவர் தலையை ஆட்டிக் கொண்டே, அந்த சாற்றமுதின் ருசியை ஆமோதிப்பது, பக்க வாத்தியக்காரனின் தனி ஆவர்த்தனத்தை அங்கீகரித்து அதை ரசிக்கும் மேடை பாகவதரின் தலையசைப்பு போன்றது. பாட்டியின் சாற்றமுது தெற்கத்திச் சமையலின் முத்தாய்ப்பு. அதன் ரகசியத்தை வெகு யதேச்சையாய்ப் பார்த்தேன். விறகு அடுப்பில் ரசம் கொதிக்கும் போது, ஒரு சிறு அச்சு வெல்லத் துண்டை எடுத்து அந்தப் பாத்திரத்திற்குள் பாட்டி போட்டு விடுவாள். அந்த நளபாக ரகசியம் கிட்டத்தட்ட சிதம்பர ரகசியம் போன்றே இருந்து, பிற்பாடு தான் அதைக் கண்டுபிடித்தேன்.

‘திருக்கண்ணமுது’ என்ற பாயாசம் கெட்டியாக இருக்க வேண்டும். பால் இட்ட பாயாசத்தில், ஏலமும், முந்திரிப்பருப்பும், கிஸ்மிஸ் பழமும் நம்மைப் பார்த்துக் கண்ணடித்துச் சிரிக்கும்.

- ‘வாய்யா, வந்து மாட்டிக்கிட்டியா!’ என்று பால் பாயாசம் நம்மைப் பார்த்து பரிகசிப்பது போலத் தோன்றும்.

மோர் சாதம் என்றால் அலமேலுப் பாட்டி அகராதியில், தயிர் சாதம் என்று அர்த்தம். ஈயக் குண்டானில் முந்தா நாள் உறை பூத்திய தயிர் கெட்டியாய் இருக்கும். கத்தி வைத்து வெட்டலாம் போலத் தோன்றும். அந்தப் புளித்த தயிரும், உப்பும் இட்ட சூடான தயிர் சாதம், தேவாமிர்தத்தை இரண்டாம் இடத்துக்குத் தள்ளி, தான் முதலிடம் பிடித்து விடும். சில சமயங்களில் தயிர் சாதத்துக்குத் தொட்டுக் கொள்ள பிரண்டைத் துவையல் போடுவாள். அந்தப் பிரண்டைத் துவையல் ருசி எவரையும் கிறங்க அடிக்கும் போதை வஸ்து. பார்த்தாலே வாய் முழுக்க ஜலம் ஊறும். பிரண்டை நல்ல மூலிகை என்று பிற்பாடு தான் தெரிந்து கொண்டேன்.

- ‘சாதத்தை மோர் விட்டு, நன்றாகப் பந்து மாதிரி பிசைந்து, உருட்டி எடுத்து, ஒருத்தன் மேல் வீசினால், அவனுக்குக் காயம் வரவேண்டும். அப்படிப் பிசைந்து உருட்ட வேண்டும் ‘. என்பாள் அலமேலு அம்மாள் என்ற அலமேலுப் பாட்டி.

தண்ணீரும், காற்றும், நிலமும், சாப்பிடும் ஆகாரமும், ஏன் மனிதர்களும் கூட அசுத்தப்படாமல் இருந்த காலத்தில் வாழ்ந்த அலமேலு அம்மாள், சமையலிலும், வாழ்விலும் சிக்கனத்தைத்தான் கடைபிடித்தாள். மாதம் ஒண்ணாந்தேதி அவளிடம் குடும்பச் செலவுக்கு நூறு ரூபாய் கொடுத்தால், மாதக் கடைசியில் எழுபது ரூபாயை என் அப்பாவிடம் திருப்பித் தருவாள்.

வீட்டில் சமையல் எல்லாமே அவளது ராஜரீகம் தான். இரண்டு நாற்பது வாட்ஸ் பல்பு மட்டும் விளக்கெரிக்க. சீமத்தண்ணி ஊற்றிய சுவரொட்டி விளக்கு, கூடத்தில் மினுக், மினுக்கென்று வெளிச்சம் தரும். ஃபேன், ரேடியோ, டிவி, மிக்சி, கிரைண்டர் இத்தியாதிகள் எதுவுமே கிடையாது.

அலமேலு அம்மாள் காராமணி சாப்பிடும் விதமே தனி அழகு தான். அதே போல் நானும் சாப்பிட்டுப் பார்த்திருக்கிறேன். காராமணியை ஒரு பூவரச இலை தென்னையில் எடுத்துக் கொண்டு, பிறகு கையில் சிறிது எடுத்துக் கொண்டு வாயில் போட்டதும், கண்களை மூடிக் கொள்ள வேண்டும். காராமணியின் உப்பும், உறைப்பும் நாக்கைத் துளைக்கும். மெதுவாக வாயால் அரைக்க, அரைக்க அதன் பயறு மணிகளின் ருசி கொஞ்சம்,

கொஞ்சமாய்ப் புலன்களுக்கு உணர வரும். உடலுக்கு தீங்கு செய்யாத, ரசாயனப் பொடிகள் கலக்காத நல்ல பண்டம் காராமணி. எனக்குக் காராமணி செய்து தந்த அலமேலு அம்மாள் என்னுடன் இப்போது இல்லை…

திண்ணையில், குழந்தை ஸ்ரீகாந்த் சாப்பிட்டு விட்டுக் கீழே போட்ட உருளைக்கிழங்கு சிப்ஸ் பொட்டலத்தின் வண்ணக் காகிதம் கிழிபட்டுக் கிடந்தது. கீழே குனிந்து அதை எடுத்துப் பார்த்தேன். நீல, சிவப்பு, வெள்ளை வர்ணங்களில் கோட், சூட், தொப்பி அணிந்த அந்த அமெரிக்க வெள்ளைக்காரன், சிப்ஸ் பொட்டலத்தை சிபாரிசு செய்யும் வண்ணம் இடது கையை உயர்த்திக் காட்டிக் கொண்டிருந்தான். அவனது சட்டையில் நீலநிற நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. எனக்கென்னவோ அவனது உருவத்தை ரசிக்கப் பிடிக்கவில்லை.

--------

## 6. ராஜாராம் ஷெட்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவிலுக்கு இரண்டு வாசல்கள் உண்டு. கிழக்குப் பார்த்த வாயிலில் உயர்ந்த இரும்பு கேட். அதன் நீட்சி இரட்டை வரிசையில் உள்ள கல் மண்டபமும் , அதில் உள்ள கடைகளும்.

ஆண்டாள் கோவிலுக்குத் தென்புறம் உள்ள இரும்பு கேட் காலையில் திறக்கப்பட்ட உடனே வெளியே வெளிச்சத்தில் தெரிவது தெற்கு மாட வீதி. ஸ்வாமி புறப்பாட்டின் போது, ஆண்டாள்-ரெங்கமன்னார் முதலில் கால் பதிப்பது அந்த தெற்கு மாட வீதியில் தான். தென்புற வாயிலில் இருந்து பார்த்தால், நேர் எதிராகத் தெரிவது சிறிய நடைபாதைச் சந்து. மூக்கை நன்றாக அடைத்துக் கொண்டு இந்தக் குறுகிய சந்தைக் கடந்து விட்டால், அதை விட்டு வெளியேறியதும் உடனே தெரிவது அகன்ற தெற்கு ரத வீதி. அவ்வீதிக்கு கச்சேரி ரோடு என்றும் பெயர் உண்டு.

மன்னர் திருமலை நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட நீதிமன்ற வளாகம் இன்னமும் அப்படியே உள்ளது. இந்தத் தகவல்கள் யாவும் நமக்கு அநாவசியம். மேற்படி கச்சேரி ரோட்டில், யாருடைய வீட்டையாவது அடையாளம் காட்ட வேண்டுமென்றால், உடனே எங்கள் ஊர்க்காரர்கள் சொல்வது,

‘கச்சேரி ரோட்டுல அந்த ராஜாராம் ஷெட் இருக்குல்ல. அதுக்கு ஒரு நாலு வீடு மேற்க தள்ளிப் போனா வக்கீல் சுந்தரேசன் ஆபீஸ் வரும். அதுக்கடுத்து இருக்கு நீங்க சொல்ற இந்த வீடு’

என்று தான் அடையாளம் சொல்வதுண்டு.

இப்படி ஊரில், ஒரு வீதியில், முக்கிய நில அடையாளமாக மாறிப்போன ‘ராஜாராம் ஷெட்’ எனப்பட்ட இந்த ஸ்தலம், உண்மையில் ஒரு வசிப்பிடம் அல்ல. பெரிய, பிரம்மாண்டமான ஆறு கால் துண்கள், கோவில் மண்டப பாணியில், முகப்பில் தென்பட, அதனுள்ளே ஒரு பெரிய நாலு கால் தீர்த்தவாரி மண்டபம். இடது மூலையில் ஒரு சின்ன அறை. அதன் வெளியே ஒரு தகரக் கொட்டகை. கட்டில், நாற்காலிகள் போடப்பட்டு உள்ள ஓய்வு எடுக்கும் இடம். பின்புறத்தில் அகண்ட , ரொம்பப் பெரிய மண்டபம். பின்புறத்தில் இன்னொரு பெரிய தகரக் கொட்டகை. எங்கு பார்த்தாலும், எப்போது பார்த்தாலும் ரிப்பேர் செய்யப்படுவதற்காக நிறுத்தப்பட்டிருக்கும் குடல் திறந்த, வாய் பிளந்த, முகம் இழந்த, பிருஷ்டம் இழந்த பஸ்கள். பஸ்

ரிப்பேர் செய்யும் சாதனங்கள், டயருக்கு காற்றடிக்கும் மின் மோட்டார், ஆக்ஸில் அச்சுக்கள், கடப்பாரை உபகரணங்கள். புகையும், தூசியும், கருப்பு ஆயில், க்ரீஸ் படிந்து மக்கி, மங்கிப் போன அதன் தூண்கள், சுவர்கள்.

எந்நேரமும் எரியும் டியூப் லைட் வெளிச்சத்தின் கீழ் ஓயாது, ஒழியாது 'டங், டங்' கென்று சுத்தியல், டிங்கரிங் சாதனங்களால் எழுப்பப்படும் காதைச் செவிடாக்கும் ஒலி. உருட்டப்படும் பஸ் டயர்கள். உப்பியிருக்கும்படி காற்றடிக்கப்படும் அதன் டியூப்கள், க்ரீஸ், மோட்டார் ஆயில், மற்றும் இஞ்சின் அழுக்கு படிந்த கருப்பான காக்கி உடைப் பணியாளர்கள். உள்ளே வருவதும், வெளியே போவதுமான காலியான பயணிகள் பேருந்துகள். அதை உர், உர்ரென்று ஓட்டிப் பார்க்கும் மெக்கானிக்குகள் கூட்டம். தேநீரும், பீடியும், புகையிலை, சிகரெட்டும் புழங்கும் பெரும் யந்திரசாலை.

இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கம் போலவே ஓயாது, ஒழியாது இயந்திர இயக்கத்தில் ஓடிக்கொண்டிருக்கும் உழைப்பவர் உலகம் ராஜாராம் ஷெட்.

ஞாயிற்றுக்கிழமை ஓய்வு நாள் என்றும், அதைப் 'பரிசுத்தமாய் ஆசரிப்பாயாக' என்றும் கட்டளையிட்ட தேவன், அதற்கு ஒரே ஒரு விதிவிலக்கு, ராஜாராம் ஷெட் என்றும் சொல்லியிருக்கிறார். அவரே ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று பஸ் ஸ்டாண்டு அருகில் உள்ள பரிசுத்த தோமா தேவாலயத்தில், பக்தர்களின் காலை ஆராதனையின் துதியைக் கேட்டுக் கொண்டிருந்த போது, என்ன நினைத்தாரோ தெரியவில்லை ; தேவாலயத்தின் மூலையில் இருந்த பலிபீடத்தை விட்டுச் சட்டென்று கீழே இறங்கினார். ராஜாஜி தெரு, கீழ ரத வீதி எல்லாம் கடந்து, தெற்கு ரத வீதிக்கு ஒரு முறை வந்து பார்த்தார். அங்கே ராஜாராம் ஷெட்டில் உள்ள காக்கிச் சீருடைப்பணியாளர்கள், ஸ்பானர், சுத்தியல், நட்டு, போல்டு சகிதம் கருமமே கண்ணாயினராய் ஒரு லாரியின் இரும்பு அச்சைப் பொருந்திக் கொண்டிருந்தனர். சம்மட்டி அடி விண்ணைப் பிளந்தது. இதைக் கண்ணுற்ற தேவன் காக்கிச் சீருடைப் பணியாளர்களை நோக்கி, அக்கினி நட்சத்திர அனல் பார்வை ஒன்றை வீசினார். அவரது கோபம் அவருக்கு ரத்தக் கொதிப்பை அதிகப்படுத்தியிருக்க வேண்டும். அவரது நாசியிலிருந்து வெப்பம் அனலாய்ப் புறப்பட்டது.

- 'ஏ பாவிகளே! அற்ப மனுஷரே! இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. இந்நாள் என்னுடைய நாள். இந்நாளில் நீங்கள் என் தேவாலயத்திற்கு வந்திருந்து, காலை ஆராதனையில் அடியேனை துதித்து,

எம்மைச் சேவிக்காமல் போனதற்குக் காரணம் என்ன? உடனே பிரதியுத்தரம் தருவீர்!´ என்றார்.

ராஜாராம் ஷெட்டின் பணியாளர்களின் தலைவன் (அவனுக்குத் தான் சட்டை முழுக்க க்ரீஸ் அழுக்குத்தீற்றல்) உடனடியாக தேவனை நோக்கி, தான் அமர்ந்திருந்த ஜீப் டயர் ஆசனத்தை விட்டு எழுந்திருக்காமலே,

- 'யோவ், இந்த லாரி நேத்திக்கு நத்தம்பட்டி பக்கத்துல, ரோட்டுல போகும்போது அதனோட ஆக்ஸில் முறிஞ்சு போச்சு. அதை உடனடியா வெல்டிங் போட்டு, சரி செஞ்சு, மீண்டும் இந்த லாரிய ரெண்டு நாளைக்குள்ள ஓட்டியாகணும்னு எங்க மொதலாளி அய்யா உத்தரவு. இந்த லாரி, நம்ம சண்முகம் டிரான்ஸ்போர்ட் கம்பெனியோடது. அது பெரிய கம்பெனியில்லா. அதனால உடனடியா, வெல்டு ரிப்பேர் செஞ்சு தந்தா, சாப்பாடும், அத்தோட டபுள் சம்பளமும் தர்றதா மொதலாளி சொன்னாரு. டபுள் சம்பளங்கற போது, அதை விட்டுற முடியுமா? அதனாலத்தான், ராத்திரி பதினோரு மணியில இருந்து, ஓயாம வேலை செஞ்சுக்கிட்டு இருக்கோம். நாளைக்குக் காலையில அநேகமா வண்டி ரெடியாயிடும். நீரு என்னடான்னா, ஞாயிற்றுக்கிழமை, தேவாலயம், ஆராதனைன்னு கதை சொல்லிக்கிட்டு இருக்கீரு! டபுள் சம்பளம் யாரு தருவாவே ! நீரு தருவீரா?' என்று உடனே பதில் தந்தான் பீட்டர் சகாயராஜ்.

- இந்தப் பதிலைக் கேட்ட சர்வ வல்லமையுள்ள தேவன் அதற்கு மேலும் அங்கு இருக்கப் பிடிக்காமல், உடனே மேல ரத வீதி வழியாய் ஓடிப்போய், செட்டியக்குடி, ஆத்துக்கடை திடல் வழியாகப் போய் பஸ் ஸ்டாண்டு கடந்து, மீண்டும் தேவாலயத்திற்குள்ளே நுழைந்து விட்டதாகவும், அதற்குப் பின்னர் அவர் தேவாலயம் விட்டு வெளியேறவே இல்லை என்றும் அது பற்றிச் சபை போதகர் ஜான் யாக்கோபு மிக்க விசனப்பட்டதாகவும் சொன்னார்கள்.

ராஜாராம் ஷெட்டைப் பொறுத்தவரை, அது உழைப்பவர் உலகம். காலண்டர், அங்கே தொங்கும் பழைய காலத்து பிரிட்டிஷ் தயாரிப்பு சுவர்க்கடிகாரம், அதன் தூண்களில் நீண்டு, சாயும் ,சூரிய வெளிச்சம் காட்டும் நாளின் பொழுதுகள், இவை யாவும் அங்குள்ள பணியாளர்களை கிஞ்சிற்றும் பாதிக்காது. எட்டு மணி நேரம் மட்டும் உழைப்பு என்ற தொழிலாளர் நலச்சட்டம் முற்றிலும் செயலிழந்து தோற்றுப் போன இடம் ராஜாராம் ஷெட். ஆறு கால் தூண் மண்டபம் வீதியைப் பார்த்தபடி

பஹோவென்று திறந்து கிடந்தது. அதற்குக் கதவுகள் கிடையாது. அங்கு உள்ள பாறாங்கல் போல கனமான இரும்பு, எஃகு உபகரணங்கள் திருடப்பட்டதாக சரித்திரமே இல்லை. ஊர் மக்கள் கூட அங்கு உள்ளே பிரவேசிக்க எண்ணியதே இல்லை.

வருஷா வருஷம், ஆடி மாதம் ஆண்டாள் உற்சவம் நடைபெறும் காலத்தில், ஒரு நாள் ஆண்டாள்-ரெங்கமன்னார் இருவரும் சப்பரத்தில் வந்து மேற்படி ராஜாராம் ஷெட்டில் உள்ள தீர்த்தவாரி மண்டபத்தின் நிழலில் அமர்ந்து இளைப்பாருவர். அங்கு பின்தொடரும் அந்தணர் குழு பிரபந்தப் பாடல்களை இசைக்கும். தொடர்ந்து திருத்துழாயும், குங்குமம், மலர்கள் பிரசாதமும் பக்தர்களுக்கு விநியோகம். அந்த ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும், ஊர் மக்கள் மண்டபத்திற்குள் ஜாக்கிரதையாய் கால் வைக்க வேண்டும். இல்லையெனில் தரையிலோ, சுவற்றிலோ அப்பியிருக்கும் க்ரீஸ் அழுக்கு உடையிலும் பற்றிக் கொள்ளும்.

அந்தணர் குழுவின் துதிப்பாடல்கள் முடிந்தவுடன், ஆண்டாள் - ரெங்கமன்னார் சப்பரம் ராஜாராம் ஷெட்டை விட்டு வெளியேறும். அத்துடன், மணிமண்டபத்தின் ஆன்மீகத் தொடர்பு அற்றுப்போகும். பிறகு லௌகீகம் மட்டுமே. ‘டட்டாங் ட்டாங்’ கென்று உளி, சுத்தியல் அடியின் ஒலி வீதியை நிரப்பும்.

ஷெட்டில் எத்தனை பேர் பணி புரிந்தார்கள் என கணக்கு வழக்கெல்லாம் யாருக்கும் தெரியாது. ‘வந்தால் வரவில் வைப்பதும், இல்லாது போனால் விடுப்பு‘ என்று தான் எடுத்துக் கொள்ளப்படும். எல்லாப் பணியாளர்களும் அட்டைக்கரியாய் அழுக்கில் குளித்திருப்பார்கள். அவர்களது சரும நிறமே கருப்பா, அல்லது க்ரீஸ், இஞ்சின் ஆயில் பட்டதால் தோலின் நிறம் ‘மையாய், மரகதமாய்’ மாறியதோ என ஒருவருக்கும் புரியாது.

கல் மண்டபத்திற்கு நேர் எதிரே, வடக்கே , கச்சேரி ரோட்டின் குறுக்கே கடந்தால் தெரிவது மோட்டார் முனியாண்டி கோயில். யந்திர மோட்டாருக்கும், முனியாண்டி சாமிக்கும் என்ன தொடர்பு என்று ஊரார் யாரும் பகுத்தறிவுக் கேள்விகள் கேட்பதில்லை. ராஜராம் ஷெட்டில் பணி செய்யும் மெக்கானிக்குகள் வருடந்தவறாமல் ஆயுத பூஜை கொண்டாடுவது வழக்கம். அப்படிக் கொண்டாடிய ஒரு சந்தர்ப்பத்தில், தெரு முனையில் கிடந்த செவ்வகக் கல் ஒன்றை எடுத்து, மஞ்சள் வைத்து, குங்குமம் அப்பி,

ஒரு கதம்ப மாலையைப் போட்டு விட்டு, ஒரு முழுத் தேங்காயை எடுத்து அதன் முன்னே வடல் போட்டு விட்டுப் போக, அதைத் தொடர்ந்து அடுத்த வருடமும் அதே கல்லுக்கு பல தேங்காய்கள் உடைக்கப்பட்டன.

பிறகு, விளக்கு மாடம் வந்தது. தினசரி மாலை வேளையில் ஒரு மெக்கானிக் அங்கு வந்து விளக்கில் எண்ணை ஊற்றி, சாமி கும்பிட்டு விட்டு, டயர் டியூப்புக்கு வல்கனைசிங் செய்யத் தொடங்கினார். இதைப் பார்த்த சக மெக்கானிக்குகளும், சூடம், சாம்பிராணி ஏற்றி, வாழைப்பழம் கொண்டு வந்து வைத்ததும், அங்கே முனியாண்டி சாந்நித்யம் கொண்டார். ஷெட்டில் உள்ள எல்லாரும் முனியாண்டி சாமியைக் கும்பிட ஆரம்பிக்க, அதைப் பார்த்த சந்தைப் பேட்டை வேதக் கோவிலைச் சேர்ந்த தானியேல் சகாயராஜ், மற்றும் பீட்டர் தேவ அன்பு போன்றோரும் ஏசு ஸ்வாமி பெரியவரா அல்லது தங்கள் ஒர்க்ஷாப் ஷெட் எதிரே உள்ள முனியாண்டி சாமி பெரியவரா என்ற தத்துவார்த்த தர்க்கத்தில் இறங்கி, பிறகு கண்ணால் காணப்படாத பரலோக தேவனை விசுவாசிப்பதை விட, கண்ணெதிரே உள்ள முனியாண்டி சாமியே வல்லமையான தெய்வம் என்றும், பிரத்தியட்ச பிரமாணம் என்றும் உணர்ந்து, அந்த முனியாண்டி சாமிக்கே சகல படையல்களையும் போட ஆரம்பித்து சாமியின் மகிமையையும், தேஜஸ்ஸையும் மேலும் ஒரு மடங்கு உயர்த்தினர்.

ஒரு பழைய பஸ் பாடியை டிங்கரிங் செய்த போது, கழண்டு விழுந்த நீண்ட தகரத்தகடு ஒன்றை எடுத்து அதை அரை வட்டமாக வளைத்து, அதன் மேலே சாமியின் பேர் எழுதி தூண் நட நினைத்த போது ராஜாராம் ஷெட்டின் ஒரே எதேச்சதிகாரியான மேனேஜர் சுந்தரம் நயினார் , அந்த முனியாண்டி சாமி, மோட்டார் யந்திரங்களைக் காப்பாற்றி, எல்லா விபத்துக்களுக்கும், நாச மோசங்களுக்கும் நீங்கலாக்கி ரட்சிக்கும் சத்தியமான தெய்வம் என்பதாலும், மோட்டார் மெக்கானிக்குகளின் காவல் தெய்வம் அவரே என்பதாலும், அந்த இரும்பு தேவனுக்கு ‘மோட்டார் முனியாண்டி’ எனப் புதிய நாமகரணம் சூட்டினார். ஒரு சுபயோக சுப தினத்தில், ஒரு சிமிண்ட் மேடையின் மேல் கொலு வீற்றிருக்க வைக்கப்பட்ட அந்தச் சாமி அன்று முதல் ‘அருள்மிகு ஸ்ரீ மோட்டார் முனியாண்டி சாமி’ என்ற புதிய பெயருடன் ராஜாராம் ஷெட் பணியாளர்களுக்கு மட்டும் யந்திர அருளும், தொழில்நுட்ப அறிவும் தந்து காவல் தெய்வமானார். ஆயுத பூஜை படையல் சகிதம் மெக்கானிக்குகளால் வணங்கப்பட்டார்.

மோட்டார் முனியாண்டிக்கு ஒரு சிக்கல், அவரது அன்னியோன்யமான மெக்கானிக் பக்தர்கள் ரூபத்தில் வந்தது. கல் மண்டபத்தில் , சில சமயங்களில் இட நெருக்கடி ஏற்பட்டு, பழைய பஸ், லாரி வண்டிகள் ரிப்பேர் செய்யப்படுவதற்காக இடம் தேடப்பட்ட போது, ஷெட்டிற்கு நேர் எதிரே வேப்ப மர நிழலில் இருந்த காலியான, விஸ்தாரமான இடம் தான் மிகத் தோதுப்பட்டதாகத் தெரிந்தது. அங்கேயே பஸ், லாரிகளை நிறுத்தி ரிப்பேர் செய்யுமாறு மேனேஜர் சுந்தரம் நயினார் உத்தரவிடவே,

அன்றிலிருந்து மோட்டார் முனியாண்டிக்கு பிடித்தது நிரந்தரத் தலைவலி.

காலை முதல் இரவு வரை, இரவு முதல் காலை வரை, இடையறாது வந்த இயந்திர வெல்டிங் சத்தம், டிங்கரிங் மற்றும் பழைய பாகங்களை உடைத்து மாற்றும் சத்தம், பணியாளர்களின் வசவு , கூப்பாடு, கெட்ட வார்த்தைப் பொழிவுகள் என ஓயாது, ஒழியாது எழுந்த பேரரவத்தால் மோட்டார் முனியாண்டி சாமி, காது சவ்வு கிழிந்து, செவிட்டு முனியாண்டி சாமியாகப் போனது சோகக் கதை.

இப்படியாக, ராஜாராம் ஷெட், அந்தக் கல் மண்டபம், அதற்கு நேர் எதிரே உள்ள வேப்ப மர நிழலில் இருந்த மோட்டார் முனியாண்டி கோவில், இந்த மூன்றுக்கும் இடையே இருந்த ஒரு முக்கோண உறவு, பலப்பல வருஷங்களாய்த் தொடர்ந்து, கால சந்தியில், சூரியனுக்குக் கீழே, காலப் பெருவெள்ளத்தின் ஒரு சிறு துளியில் பன்னெடும் ஆண்டுகளாய் இந்த முக்கோண உறவின் ஸ்தூல மற்றும் சூட்சுமத் தன்மைகள் கூட எந்தப் பார்வையாளனுக்கும் எந்த வித மாற்றத்தையும் கண்ணில் தோற்றுவிக்காததற்கு காரணம் என்ன?

பிரபஞ்சத்தின் அணுத் தத்துவம், நொடிக்கு நொடி உலகம் மாறிக் கொண்டிருக்கிறது என்று ஒரு பௌதீகக் கோட்பாட்டை முன் வைத்தாலும், இந்த ராஜாராம் ஷெட் விஷயத்தில் எந்த விஞ்ஞான விதிகளும் அதற்குப் பொருந்தாது. காலமே பனிக்கட்டி போல் உறைந்து போய், தேக்கமுற்று நின்ற இடம் அது தான்.

சிக்கல் வெடித்தது எப்போது என்றால், ராஜாராம் ஷெட்டின் டிரஸ்டி ராமானுஜம் செட்டி , கோதண்ட ராம ராஜாவிடம் மண்டபத்தைக் காலி செய்யச் சொல்லி வாய்மொழி வேண்டுகோள் விடுத்த போது தான். பண

பலமும், அதிகாரபலமும், முரண்டு பிடிக்கும் குணமும் கொண்ட கோதண்டராம ராஜா இடத்தைக் காலி செய்ய மறுக்க, பத்து நாட்களில் அவர் அலுவலகத்திற்கு ஒரு வக்கீல் நோட்டிஸ் பதிவுத்தபாலில் அனுப்பப்பட்டது. கோதண்டராம ராஜா அந்த வக்கீல் நோட்டிஸை எடுத்துத் தன் முக வேர்வையைத் துடைத்துக் கொண்டார். பிறகு, தன் ஆஸ்தான வழக்கறிஞர் ப்ளீடர் சுதர்ஸனத்தை அணுகி, மேற்படி வக்கீல் நோட்டிஸைக் கொடுத்து, உரிய நடவடிக்கை எடுக்க வேண்டினார். நெற்றியில் பளிச்சென்று ஒளிரும் மூன்று கோடுகள் உடைய திருமண்ணும், காதில் கடுக்கனும் அணிந்த செம்பொன் நிறத் தோல் பளபளத்த ப்ளீடர் சுதர்ஸனம் அந்த வக்கீல் நோட்டிஸை நிதானமாகப் படித்துப் பார்த்துவிட்டு,

- ‘ராஜா ! நல்லாக் கேட்டுக்கோங்கோ ! நீங்க இப்ப வாடகை கொடுத்து நடத்திண்டு வர்ற பஸ் ரிப்பேர் ஷெட்டை ஒரு மாசத்துல காலி பண்ணித்தரச் சொல்லி உங்க கட்டிடத்து ஓனர் லாயர் நோட்டிஸ் அனுப்பிச்சுருக்கா. நீங்க என்ன பண்ணப்போறேள் ?’

- ‘சாமி ! என்ன சாமி செய்யறது ? எனக்கே ஒண்ணும் அடைபடல. இப்போதைக்கு காலி பண்ண முடியாது. மலை மலையா இரும்புச் சாமானை வாங்கிக் குவிச்சுட்டேன். இப்ப ஷெட்டைக் காலி பண்ணினா, இதே மாதிரி வேற இடம் ஊருக்குள்ளே அகப்படாது. அதனால நீங்களாப் பாத்து உங்க படிப்புக்கு ஏத்த மாதிரி, ஒரு சரியான பதில் கொடுத்துடுங்க!’ என்றார் கோதண்டராம ராஜா.

- ‘அவ்வளவு தானே ! நீங்க ஏன் கவலைப்படறேள்? நானாச்சு. விட்டுடுவனா? அந்த வைத்தியநாதன் யாரு? அவன் எனக்கு ஒரு சுண்டைக்காய் மாதிரி. ரிப்ளை நோட்டிஸ்ல நான் கொடுக்கற கொடுப்புல அவன் தண்ணி கக்கப் போறான் பாருங்க! ‘ என்றார் ப்ளீடர் சுதர்ஸனம்.

முழு நூறு ரூபாய்த் தாள்கள் மூன்று பெற்றுக் கொண்ட சுதர்ஸனம், அன்றிரவே உட்கார்ந்து, தான் அது வரை படித்திருந்த எல்லா பிரிட்டிஷ் ஆங்கில வாக்கியங்களையும், சொலவடைகளையும் பயன்படுத்தி , ஐந்து பக்கங்களில் சுடச்சுட ஒரு பதில் நோட்டிஸ் தயார் செய்து, மறுநாளே அதை டைப் செய்து, பதிவுத்தபாலில் அரு. வைத்தியநாதனுக்கு அனுப்பி வைக்க, அந்தப் பதில் நோட்டிஸை படித்துப் பார்த்த வைத்தியநாதனுக்கு நெற்றி நரம்பு யாவும் கோபத்தில் துடித்தது.

- 'அந்த நாமக்கார ப்ளீடர் சுதர்ஸனம், எங்கிட்டயே வேலையைக் காட்டிட்டானா ? வரட்டும். கோர்ட்டுல அந்தாள வெச்சுக்கறேன்' என்று மனதில் கறுவியபடி சென்னைக்குத் தொடர்பு கொண்டார்.

- சென்னையில் வைர வியாபாரம் செய்யும் கலகலவல்ல ராமானுஜம் செட்டி தான் அந்த ராஜாராம் ஷெட் இருக்கும் கல் மண்டபத்தின் நிர்வாகக் காரியதரிசி. ராமானுஜம் செட்டி வைர வியாபாரம் செய்யும் கோமுட்டிச் செட்டி என்னும் வைசியப் பிரிவைச் சேர்ந்த வீர வைணவர். அவர் உடனடியாக தனது டிரஸ்ட் வழக்கறிஞரான அரு. வைத்தியநாதனுக்கு கடுதாசி எழுதி,

'ஸ்வாமி! தாங்கள் இவ்விஷயத்தில் என்ன செய்ய சித்தமாய் இருக்கிறீர்களோ அவ்வண்ணமே செய்து கொள்ளவும். கோமுட்டி செட்டி டிரஸ்ட்டுக்கு நான் நிர்வாக காரியஸ்தன் என்பது உண்மையே. ஆனாலும், எங்கள் வகையறா ஆட்களின் ஆஸ்தி, பூஸ்தி யாவற்றுக்கும் பல வருஷங்களாகவே நீங்கள் தானே ரட்சகர் !

ஆகவே, நீங்கள் இந்த ராஜாராம் ஷெட் விஷயத்தில் கோர்ட்டில் வியாஜ்யம் நடத்தித் தான் தீர்வு காண முடியும் என்றால், அவ்வண்ணமே செய்து கொள்ளுமாறு தேவரீரைப் பணிந்து பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன். எமக்கு மெட்ராஸ் பட்டினத்தில் வைர வியாபாரம் நடப்பதால், இந்த வியாஜ்யம் நடத்த நேர அவகாசம் கிடையாது. ஆதலால், எங்கள் தூரத்து உறவினரும், மேற்படி கோமுட்டிச் செட்டி டிரஸ்டின் மற்றொரு உறுப்பினருமான கலகலவல்ல கண்ணபிரான் செட்டியை மேற்படி வழக்கில் எமது பவர் ஏஜெண்டாக நியமித்து மேற்படி வழக்கை தேவரீரே நடத்திக் கொள்ளுமாறும், வியாஜ்யம் நடத்த ஏற்படும் சகல சிலவுகளையும் பைசா விடாமல் கணக்கு எழுதி, ரசீதுகளை கண்ணபிரான் செட்டியிடம் கொடுத்து, உங்களுக்குச் சேர வேண்டிய ப்ளீடர் ஃபீஸ் உள்ளிட்ட கோர்ட் சிலவுத் தொகைகளையும், குமாஸ்தா, டவாலி, மஸால்ஜி, ஆமீனா ஆகியோருக்குச் சேர வேண்டிய மாமூல், இனாம்களையும் வசூலித்துக் கொள்ள வேண்டுமாயும் ஸ்வாமியிடம் பணிந்து வேண்டிக் கொள்கிறோம்.

ஸ்வாமியின் வீட்டில் உள்ளோர் சேம நல லாபங்களையும் அடியேன் விசாரித்தாகச் சொல்லவும்.

தாஸன்,

இவண்,

எஞ்ஞான்றும் எந்தெய்வம் ஸ்ரீமந்நாராயணன் அடிமை,

*தாஸன் கலகலவல்ல ராமானுஜம் செட்டி.'*

கடிதத்தைப் படித்த அரு. வைத்தியநாதன், ராஜாராம் ஷெட் சம்பந்தப்பட்ட ஆவணங்களைத் தயார் செய்து பத்து நாட்களுக்குள், ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சீப் கோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்ததும், எதிர் தரப்பான கோதண்டராம ராஜாவுக்கு, நீதிமன்ற சம்மன் சார்பு செய்யப்பட்டது. அவர் அதைக் கொண்டு போய், ப்ளீடர் சுதர்ஸனத்திடம் கொடுக்க, ப்ளீடரோ எகத்தாளமாய் ஒரு சிரிப்பு சிரித்து விட்டு,

- 'சரி, வேலைய ஆரம்பிச்சுர வேண்டியதுதான் ராஜா. நாளை முதல் கச்சேரி களை கட்டும். நேர்ல வந்து நீங்களே பாத்துக்கோங்க !' என்று சொல்லி விட்டு தன்னுடைய தலகாணி சைஸ் சி.பி.சி. புத்தகத்துக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டார்.

கச்சேரி ரோட்டில் உள்ள திருமலை நாயக்கர் மஹாலின் உள்ளே உள்ள முன்சீப் கோர்ட்டில் வியாஜ்யம் ஆரம்பமானது.

அதன் மைய ஹாலில் உள்ள குதிரை லாடம் போன்ற வடிவத்தில் இருக்கும் பெரிய சைஸ் டேபிளின் எதிரெதிர் முனைகளில், ஜட்ஜின் டெய்ஸுக்கு நேர் கீழே உட்கார்ந்திருந்த சுதர்ஸனமும், அரு. வைத்தியநாதனும் சிவில் வழக்குகளில் இரண்டு சாம்ராட் சக்கரவர்த்திகள். இருவரும் ஒருவரையொருவர் பார்த்து முகமன் சொல்லிக் கொண்ட பின், ஒரு மெல்லிய புன்முறுவலுடன், ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். அதற்கு என்ன அர்த்தம் என்று அவர்கள் இருவருக்கும் மட்டுமே தெரியும்.

தாவா வியாஜ்யம் தொடங்கியது. அரு. வைத்தியநாதன் தாக்கல் செய்த பிராதுக்கு, எதிர் வாதுரை தாக்கல் செய்ய பல வாய்தாக்கள் வாங்கினார் ப்ளீடர் சுதர்ஸனம். பிறகு ஒரு வழியாய், எல்.சி. (Last Chance) என்று கோர்ட்டார் உத்தரவிட்ட பிறகு, ஒரு நாள், எதிர் வழக்குரை ஒரு வழியாய் தாக்கலானது. வழக்கு விசாரணை என்று குறிப்பிடப்பட்டு, அதற்கு நான்கு தேதிகள் கழிந்த பின்னர், ப்ளீடர் சுதர்ஸனம் தனது ஆபீஸ் குமாஸ்தாவை அனுப்பி வைக்க, அந்தப் பழம் தின்று கொட்டை போட்ட

குமாஸ்தாவோ, கோர்ட் ஹெட் கிளார்க்கை ஒரு நாள் காலை, ராஜ நாயகம் பிள்ளை ஹோட்டலில் டிபன் சாப்பிடும் சாக்கில் சரி பண்ணி, ஹெட் கிளார்க்கின் காபி, டிபன் செலவை குமாஸ்தாவே கொடுத்து, அத்துடன் ஹெட் கிளார்க்கின் குடும்பத்திற்கும் பெரிய டிபன் பார்சல் வாங்கிக் கொடுத்து, இருபது ரூபாயை எடுத்து சிரித்துக் கொண்டே ஹெட் கிளார்க்கின் உள்ளங்கையில் அழுத்த, அதைப் புரிந்து கொண்ட அவரோ,

- ‘உங்களுக்கு கோர்ட்ல என்ன காரியம் ஆகணும்னு மட்டும் சொல்லுங்க சார்! ‘ என்று பல்லவியைப் பாட ஆரம்பிக்க, சுதாரித்துக் கொண்ட வக்கீல் குமாஸ்தா,

- ‘சார், இந்த ஓ.எஸ். இருநூத்து நாப்பத்து நாலுக்கு அறுபத்து மூன்று கேஸ் கொஞ்சம் சிக்கலான கேஸ். அதைக் கொஞ்சம் டிரையல் ஓப்பன் பண்ணாம ஒரு இழுப்பு இழுத்து விட்டீங்கன்னா, அதுவே போதும் ‘ என்று பல்லவியைத் தொடர, ஹெட் கிளார்க் புரிந்து கொண்டு, ஒரு சிட்டிகை நயம் ரத்தினம் பட்டணம் பொடியை எடுத்து மூக்கில் உறிஞ்சியபடி, ஒரு நீண்ட இழுப்பு இழுத்தார். அதன் பின் விளைவு என்ன என்று ஒரு சில வாரங்களில் தெரிந்தது.

ராஜாராம் ஷெட் வழக்கின் கேஸ் கட்டு மொத்தமும் வரிசையில் கட்டக் கடைசிக்குத் தள்ளப்பட்டது. காலையில் வழக்கு எண்ணைச் சொல்லி, சூட் கிளார்க் வாதி, பிரதிவாதிகள் பேர் சொல்லி அழைக்கும் படலம் முடிவதற்குள் மதியம் பன்னிரண்டரை மணி ஆகிவிடும். கரண்ட் போய் விடும். அரண்மனை போன்ற கோர்ட் வளாகம் இருளில் மூழ்கி விடும். மூன்று அடுக்கு உடை அணிந்த நீதிபதி வெப்பத்தில் புழுங்கி வியர்ப்பார். கோர்ட் டவாலி அவருக்கு பனை ஓலை விசிறியால் விசிறி விடுவான். அதற்கு மேலும் பொறுக்க மாட்டாமல், முன்சீப் மற்ற கேஸ்களை எல்லாம் வாய்தாப் போடும்படி சூட் கிளார்க்கிடம் சொல்லி விட்டு, மதியச் சாப்பாட்டுக்குப் பின்பு வழக்கு விசாரணைகள் என்று சொல்லி விட்டு மேடையை விட்டிறங்கி சேம்பருக்குப் போய் விடுவார்.

இப்படியே ஒவ்வொரு முறையும் வாய்தா தேதியில், ராஜாராம் ஷெட் கேஸ் பண்டல் எடுக்கப்படாமலேயே வாய்தா போடப்பட்டு எட்டு மாதங்கள் அதிலேயே ஓடிவிட்டது.

அதற்கு அடுத்த ஏப்ரல் மாதத்தில் முன்சீப் மாற்றலாகி சிவகங்கை கோர்ட்டுக்குப் போய்விட்டார். புதிதாகப் பணியேற்ற நாகர்கோவில் முன்சீப் ரொஸாரியோ கிளாடிஸ்டன் பதவியேற்றதுமே குடலிறக்க ஆப்பரேஷனுக்காக மருத்துவ விடுப்பு போட்டு விட்டு சொந்த ஊரான நாகர்கோவிலுக்குப் போய்விட, அவருக்குப் பதிலாக அவரது இடத்தையும் சேர்த்து கூடுதல் பொறுப்பு என்று பார்த்து வந்த மாஜிஸ்திரேட்டு, அதிகப் பணிச்சுமையைப் பார்த்து விட்டு, பயந்துபோய், ஒவ்வொரு நாளும் சிவில் கட்டுக்களை எல்லாம் எடுத்து ரெண்டு மாதம், ரெண்டு மாதம் என்று வாய்தா தேதி போட, மேலும் ஆறு மாதம் ஓடியது.

மருத்துவ விடுப்பில் போன நாகர்கோவில் முன்சீப் ரொஸாரியோ கிளாடிஸ்டன் பணிக்குத் திரும்பியதும், பழைய வழக்குகளை எல்லாம் எடுத்து பைசல் செய்ய வேண்டும் என ஹெட் கிளார்க்கிடம் உத்தரவிட்டார். ஆனால், மாயா ஜால, மந்திர ஜால, இந்திர ஜால வித்தைகளைக் கற்றுத் தேர்ந்த ஹெட் கிளார்க், மேற்படி 'ராஜாராம் ஷெட் ' வழக்கின் மொத்தக் கேஸ் கட்டும் பிற கட்டுகளுடன் கலந்து காணாமல் போய் விட்டதால், அதைத் தேடி எடுக்க அவகாசம் கேட்டு, முன்சீப்பிடம் பணிந்து வேண்டிக் கொண்டார். 'கர்த்தராகிய ஏசு கிறிஸ்துவையே பகைத்துக் கொண்டாலும், ஹெட் கிளார்க்கைப் பகைத்துக் கொள்ள மாட்டேன் 'என்ற கொள்கை உறுதி கொண்டவர் முன்சீப் ரொஸாரியோ கிளாடிஸ்டன். ( ஏனெனில், கோர்ட் எழுத்தர்களின் பராக்கிரமம் அப்படி ! )

- 'ஒண்ணும் அவசரமில்லை. நிதானமா தேடி எடுங்க. எங்காவது மற்ற கட்டுக்களோட கலந்து இருக்கும். ஆனா, நீங்க கண்டிப்பா அதைத் தேடி எடுத்துத் தரணும் ' என்று கண்டிப்புடன் உத்தரவிட்டார் முன்சீப்.

பிற்பாடு ஒருநாள் , கேஸ் கட்டு, ஹெட் கிளார்க்கினால் 'தேடி' எடுக்கப்பட்டு வழக்கு டிரையல் லிஸ்ட்டில் போடப்பட்டது. ( கேஸ் கட்டை ஒளித்து வைத்ததே ஹெட் கிளார்க் தானே! )

ப்ளீடர் சுதர்ஸனம், மேற்படி வழக்கில் வாதி தரப்பில் தாக்கல் செய்யப்பட்ட பிராதுடன் உள்ள ஆவணங்கள், அசல் ஆவணங்கள் அல்ல. அவை யாவும், சார்பதிவாளர் அலுவலக நகல்கள் என்பதால் வழக்கு விசாரணை நடத்துவது சரியல்ல, முறையல்ல, நீதியல்ல, நியாயமல்ல என்று ஒரு சீராய்வு மனுவைத் தயார் செய்து, அதை மயிலாப்பூர் வக்கீல் சிவில் புலி ஸ்ரீநிவாஸாச்சாரியார் மூலம் சென்னை உயர்நீதிமன்றத்தில்

தாக்கல் செய்து, ஸ்ரீவில்லிபுத்தூர் கீழமை நீதிமன்றத்தில் நடக்கும் வழக்குக்கு இடைக்காலத் தடை வாங்கினார்.

மூன்று முடிச்சு போடுவது திருமாங்கல்யத்தில். அது வாழ்நாளெல்லாம் தொடரும். சிவில் வழக்கில் இரண்டு முடிச்சுக்கள் போட்டாலே அவிழ்ப்பது வெகு சிரமம். சீராய்வு மனுவைத் தாக்கல் செய்து அந்த உத்தரவின் நகலைக் காட்டி, ப்ளீடர் சுதர்ஸனம் திறந்த நீதிமன்றத்தில் பலா் முன்னிலையில் அதைப் பகிரங்கமாக வாசித்துக் காட்ட, நீதிமன்றமே 'ஆ' வென்று வாய் பிளந்தது.

பத்து மாதங்கள் கழிந்த பின்னால், ஒரு வழியாக வழக்கிற்குத் தேவையான அசல் ஆவணங்கள் கலகலவல்ல ராமனுஜம் செட்டியாரால் தேடி எடுக்கப்பட்டு, ஒரு ஆள் மூலமாகக் கொண்டு வந்து தரப்பட்டு, பிறகு அதை வைத்து உயர்நீதிமன்ற 'ஸ்டே' தடை உத்தரவை விலக்க வைத்து, அந்த உத்தரவைக் கொண்டு வந்து ஸ்ரீவில்லிபுத்தூர் நீதிமன்றத்தில் அரு. வைத்தியநாதன், முன்சீப் முன்னால் கொண்டு வந்து படிக்கலாம் என்று வாய்தா தேதிக்கு முன்பாக தயாரான போது, ரொஸாரியோ கிளாடிஸ்டன் பதவி உயர்வில் வேலூருக்கு சார்பு நீதிபதியாகப் போய் விட, மீண்டும் ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சீப் நீதிமன்றம், முன்சீப்பே இல்லாமல், நொண்டியடித்தபடியே நடந்து கொண்டிருந்தது.

ஒரு வழியாக, பிற்பாடு, வழக்கு விசாரணை துவங்கியதும், சாட்சிகளிடம் குறுக்கு விசாரணை செய்வதில் ப்ளீடர் சுதர்ஸனம் சகல விதமான ஜவ்வு மிட்டாய் உத்திகளையும் பின்பற்றி, வாய்தா வாங்கி, வாய்தா வாங்கி, வாதி தரப்பு சாட்சிகளை நீதிமன்றத்துக்கு மாதக்கணக்கில் வரவழைத்து அவர்களைக் கலங்கடித்தார்.

பிரதிவாதி தரப்பில் கோதண்டராம ராஜாவை முதல் விசாரணை செய்ய அவரைப் பெட்டி ஏற்றவே நான்கு மாதம் செலவழித்து வாய்தாவில் ஓட்டினார் சகலகலாவல்லவரான சுதர்ஸனம்.

முதல் விசாரணையும், சாட்சிகளிடம் குறுக்கு விசாரணையும் முடிந்த நிலையில் சாட்சி விசாரணையை முடித்துக் கொள்வதாகச் சொன்ன சுதர்ஸனம், சில நாட்களிலேயே மீண்டும் சாட்சிகளை மறு விசாரணை செய்ய வேண்டும் என மனு ஒன்றைத் தாக்கல் செய்து வைத்தார்.

வாதி தரப்பு சாட்சிகளோ சோர்ந்து இளைத்துப் போனார்கள். விசாரணை எல்லாம் முடிந்தவுடன், வாய்மொழி வாதுரைகளை வழங்க மேலும் வாய்தாக்கள் வாங்கி, வழக்கை மலையாள ரப்பர் போல இழுத்த சுதர்ஸனம், ஏகப்பட்ட இடைநிலை மனுக்களை தாக்கல் செய்ய , கோர்ட்டில் உள்ள 'ராஜாராம் ஷெட்' கேஸ் கட்டு பத்து மாதப் பிள்ளைத்தாய்ச்சிக்காரி வயிறு உப்பியது போல, ஏகப்பட்ட காகிதங்களோடு பெருத்து விட்டது. ஒவ்வொரு வாய்தாவிலும் அந்தக் கேஸ் கட்டை எடுத்து நீதிபதியின் மேஜை மேல் சூட் கிளார்க் வைக்க, அதன் முக்கால் அடி உயரத்தையும், அரைத் துலாம் அளவுக்கு உள்ள அதன் எடை பருமனையும் பார்த்த சிவில் முன்சீப், கண்ணை மூடிக் கொண்டு இரண்டிரண்டு மாதங்களாக வாய்தா போட்டார். வழக்கின் வாதுரைகளை சமர்ப்பிக்க வாதி தரப்பும், பிரதிவாதி தரப்பும் மாறி மாறி கால அவகாசம் கேட்கவே, அது மேலும் மேலும் நீண்டு கொண்டே போனது.

ஒரு ஏப்பிரல் மாதம் இறுதியில் 'ராஜாராம் ஷெட் ' வழக்கு வாய்தாவுக்கு வர, உடனே தன் நாற்காலியில் இருந்து எழுந்த ப்ளீடர் சுதர்ஸனம்,

- 'யுவர் ஆனர், இந்த வழக்கை மே மாதம் கோடை விடுமுறைக்குப் பின்பு எடுத்துக் கொள்ள வேண்டுகிறேன். கோர்ட்டாரவர்களுக்கு எனது கோடை விடுமுறை நல்வாழ்த்துக்கள்! ' என்று தன் வாய்மொழியாலேயே பூங்கொத்துக்கள் தந்து வாழ்த்த, உச்சி குளிர்ந்த முன்சீப்,

- 'ஓகே, மிஸ்டர் சுதர்ஸனம்! தங்கள் விருப்பப்படியே !' என்று சொல்லி ரொம்ப சௌகரியமாக மூன்று மாதங்களுக்கு கேஸைத் தள்ளி வைத்து விட்டு கர்நாடகாவில் உள்ள தன் உறவினரைப் பார்க்கப் போய் விட்டார்...

மேற்படி வழக்கின், இறுதித் தீர்ப்பில், தெற்கு ரத வீதி கல் மண்டபம், சென்னை கலகலவல்ல கோமுட்டி செட்டி டிரஸ்டுக்கே ஏகமாய்ப் பாத்தியப்பட்டதென்று முன்சீப் நீதிமன்றம் விளம்புகை செய்தும், அதில் வாடகைதாரராகக் குடியிருக்கும் 'ராஜாராம் ஷெட் ' கோதண்டராம ராஜா, தீர்ப்புக் கண்ட முப்பது நாளில் ஷெட்டை காலி செய்து வழக்கின் பவர் ஏஜெண்ட் கண்ணபிரான் செட்டி வசம் ஒப்புவிக்க வேண்டும் என்று உத்தரவு தரப்பட்டது.

வழக்கின் முடிவை எதிர்த்து, சுதர்ஸனம் மேல்முறையீட்டுக்கு சார்பு நீதிமன்றத்தில் அப்பீல் தாக்கல் செய்தார். முன்சீப் கோர்ட்டில் விளையாடிய சகல வாய்தா விளையாட்டுக்களையும் விளையாடி, நாலரை வருஷம் ஓட்டினார். நீதிபதிகள் மாறி, கிளார்க்குகள் மாறி, ஆபீஸ் குமாஸ்தாக்கள் மாறி, சிலர் பணி மூப்பு அடைந்து, ஓய்வு பெற்ற நிலையில், ராமானுஜம் செட்டிக்குச் சாதகமாக அப்பீல் தீர்ப்பும் வந்தது.

இரண்டாம் மேல்முறையீடு, உயர்நீதிமன்றத்தில் என்பதால், கேஸ் கட்டையும், சார்பு உயர்நீதிமன்ற தீர்ப்பாணை நகலையும் எடுத்துக் கொண்டு, சென்னைக்கு ரயிலேறிய சுதர்ஸனம், மயிலாப்பூர் வக்கீல் சிவில் புலி ஸ்ரீநிவாஸாசாரியாரிடம் கேஸ்கட்டையும் பணத்தையும் கொடுத்து விட்டு,

- ‘இந்தக் கேஸ் முடியவே கூடாது. நீங்க என்ன பண்ணணுமோ அதைப் பண்ணிருங்கோ’ என்று வேண்டுகோள் ஒன்றைப் பணிந்து வைக்க,

- ‘நீ ஒண்ணும் கவலைப்படாத சுதர்ஸனம். இந்தக் கேஸ் கட்டு மெட்ராஸை விட்டுத் தாண்டாது. அதுக்கு நான் கேரண்டி. அப்படி இந்தக் கேஸ் மெட்ராஸ் ஹைகோர்ட்டைத் தாண்டினா, இனிமே நான் கோட்டு, கவுன் மாட்டவே மாட்டேன். போதுமா? ‘ என்று வீராவேச சபதம் எடுத்த சிவில் புலி, மகாபாரதத்தில் கிருஷ்ணன் கௌரவர்களிடம் ஆடிய சகல சூது, வாதுக்களையும் ஆடி, மெட்ராஸ் உயர்நீதிமன்றத்திலேயே ‘ராஜாராம் ஷெட் ‘ கேஸ் கட்டை உறங்க வைத்து,

‘ பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு…’

என்று வாய்தாப் பாட்டு பாடினார்….

ஒருநாள் பிற்பகல், ஸ்ரீவில்லிபுத்தூரில் பங்குனி வெய்யில் கொளுத்திக் கொண்டிருந்த போது, கச்சேரி ரோட்டில் உள்ள தன் ஆபீசில் சட்டையைக் கழட்டிப் போட்டு விட்டு, வெற்று உடம்புடன் ஒரு ஓலை விசிறியால் விசிறிக் கொண்டு பெருமூச்சு விட்டபடி, அரு. வைத்தியநாதன் வாசல் கதவைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்க, தந்தி அலுவலகப் பணியாள் வந்து ரொம்ப பவ்யமாக ஒரு தந்தியைக் கொண்டு வந்து கொடுக்க, அதில், ராமானுஜம் செட்டி மாரடைப்பால் இறைவனடி சேர்ந்ததாகத் தகவல் வந்திருந்தது. திடுக்கிட்டுப் போன வைத்தியநாதன் உடனடியாய் ரயில் பிடித்து, சென்னைக்குப் போய் மரியாதை நிமித்தமாய் அவரது குடும்பத்தினரிடம் துக்கம் விசாரித்து விட்டு ஊர் திரும்பினார்.

ப்ளீடர் சுதர்ஸனம், தனக்கு வயது முதிர்ந்து விட்ட காரணத்தால், பிள்ளை கல்யாண சுந்தரத்தை தன்னுடைய இடத்தில் நிலை நாட்டி விட்டு, தான் அமர்ந்து கேஸ் கட்டுகளைப் படித்த அதே விக்டோரியா காலத்து ரோஸ் வுட் நாற்காலி, அதே சி.பி.சி. சிவில் புரோஸீஜர் கோடு புத்தகம், அதே எம்.எல்.ஜே. ஜர்னல்கள், கனத்த லெதர் பைண்டு புத்தகங்கள், மர அலமாரிகள், தரையில் நிற்கும் நீண்ட கழுத்து கொண்ட ராலி.ஃ.பேன், தலை நரைத்த நோஞ்சான் குமாஸ்தா, எடுப்பு ஆள் பையன், மற்றும் அதே மூங்கில் தடுக்கு போடப்பட்ட திண்ணை உள்ள ஆபீஸ், இராஜபாளையம் ராஜுக்கள் கொண்டு வந்து தந்த சிவில் கேஸ் கட்டுக்கள், மைக்கூடு, பார்க்கர் பேனா, இவை யாவற்றையும் தனது ஏக புத்திரன் திருவளர்ச்செல்வன் சிரஞ்சீவி கல்யாண சுந்தரத்துக்கு தத்தம் செய்து, அர்ப்பணித்து விட்டு, தான் வழக்கறிஞர் தொழிலில் இருந்து ரிட்டையரானதை சென்னை பார் கவுன்சிலுக்கு ஒரு லெட்டர் எழுதித் தெரிவித்து விட்டு, ஸ்ரீவில்லிபுத்தூர் நாடகசாலைத் தெருவில் உள்ள தன் பெரிய, பழைய காலத்து இரும்பு கிர்டர்கள் வைத்துக் கட்டிய அரண்மனை வீட்டின் கூடத்தில் உள்ள சாய்வு நாற்காலியில் ஒரேயடியாகச் சாய்ந்து விட்டார்...

சிவில் வழக்கு, சென்னை உயர்நீதிமன்றத்தில் ஒரு கலி காலத்தையும், ஒரு ஊழிக் காலத்தையும், கடந்து, அதன் இறுதித் தீர்ப்பு வந்தபோது, ஒன்பது வருடங்கள் கடந்து சென்று விட்டிருந்தன. மேல்முறையீட்டு வழக்கின் உத்திரவு கோமுட்டி செட்டி டிரஸ்டுக்குச் சாதகமாய் வந்தபோது, அந்தத் தகவல் தபால் மூலமாய் ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போய்ச் சேர்ந்த போது, அரு. வைத்தியநாதனுக்கு அவரது புத்திரன் ஸ்ரீதர் வருஷ தெவசம் செய்து கொண்டிருந்தான்.

மேல்முறையீட்டுத் தீர்ப்புக்கு எதிராக சீராய்வு மனு தாக்கல் செய்த பிரதிவாதி தரப்பு வக்கீல் கல்யாண சுந்தரம், தனக்கென்று அந்த சீராய்வு மனுவை நடத்தித் தர புதிய வக்கீல் ஒருத்தரை மதராஸ் பட்டணத்திலேயே தேடிக் கொள்ள வேண்டியதாயிற்று. காரணம், பழைய ஹைகோர்ட் வக்கீல் சிவில் புலி ஸ்ரீநிவாஸாசாரியார், அந்த வழக்கின் சீராய்வு மனுவை தாக்கல் செய்ய வக்காலத்தில் கையெழுத்துப் போடுவதற்கு உயிரோடு இல்லாததே காரணம். சீராய்வு மனு தாக்கல் செய்த கையோடு ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் திரும்பி வந்த கல்யாண சுந்தரம், பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டு, நரம்பு மண்டலக் கோளாறினால் படுத்த படுக்கையாகிப் போனது ரொம்ப சோகமான விஷயம்.

அதை விட சோகம், சீராய்வு மனு தாக்கல் செய்யப்பட்டு விட்டதால், இன்னும் ஒரு மூணு நாலு வருஷம் ராஜாராம் ஷெட்டில் தொழிலை ஓட்டலாம் என்ற இறுமாப்பில் கோதண்ட ராம ராஜா, ஒரு ஞாயித்துக்கிழமை அன்று, தன் சகாக்களுடன் இராஜபாளையம் அருகே மேற்கு மலைச்சாரலில் ஒரு தென்னந்தோப்பில் அமர்ந்து, சோம பானம், சுரா பானம் போன்ற உற்சாக பானங்களை தன் வயிற்றில் இடங்கொள்ளாமல் போகுமட்டும் ஊற்றிக் கொள்ள, கொஞ்ச நேரத்தில் 'அய்யோ இடது மார் வலிக்கிறதே' என்று நெஞ்சைப் பிடித்துக் கொள்ள, அவர் ஆஸ்பத்திரிக்கு உடனடியாகக் கொண்டு செல்லப்பட, ஆஸ்பத்திரியில் அவரது உடலைப் பரிசோதித்த டாக்டர்,

'ஸாரி! அவர் இறந்து போய் ஒரு மணி நேரம் ஆச்சே! ' என்று ரிப்போர்ட் வழங்க, கோதண்டராம ராஜாவுக்கு பதினாறாம் நாள் காரியங்கள் முடிந்த நிலையில், அவரது ஸ்தானத்திற்கு வாரிசாய் வந்தார் அவரது மகன் மாசிலாமணி ராஜா.

சிவில் வழக்கு நடத்துவது என்றால் வாய்தா வாங்குவது. வாய்தா வாங்குவது என்றால் சாக்குப்போக்கு சொல்வது. சாக்குப்போக்கு சொல்வது என்றால் காரணங்களைக் கண்டுபிடிப்பது. சிவில் வழக்கில் காரணங்களைக் கண்டறிபவர் நல்ல வக்கீல், இதைச் செய்பவரே திறமையான வழக்கறிஞர். அவரே தொழிலில் வெற்றி கண்டவர் ஆவார்.

சீராய்வு மனுவில் தீர்ப்பு வந்த பிறகு, எஸ்.எல்.பி. எனப்படும் சிறப்பு அனுமதி பெற்று, 'ராஜாராம் ஷெட் ' கேஸ் கட்டு ரயிலில் டெல்லிக்குப் பயணமானது.

சுந்தீப்தோ பந்தோபாத்யாயா என்ற வாயிலேயே நுழையாத பெயர் கொண்ட மூத்த வழக்கறிஞரே அப்பீலில் ஆஜரானார். டெல்லியில் சில மாதங்களில் குளிர் அதிகமாகும். குளிர் காலத்தில் பனி உறையும். மக்கள் யாவரும் வீட்டை விட்டே வெளியேறாமல் வீட்டைப் பூட்டிவிட்டு உள்ளேயே கிடந்து உறங்க ஆரம்பித்து விடுவார்கள். பனிக்காலத்தில் உறங்க ஆரம்பித்த 'ராஜாராம் ஷெட் ' கேஸ் அப்பீல் கட்டு நிரந்தரமாய்த் தூங்கிப் போய் விட்டது. நாள் கணக்கில், மாதக்கணக்கில் என்று இல்லாமல் கீழே உள்ள நீதிமன்றங்களில் பயணித்து வந்த காரணத்தால், அசதியாக, வருடக்கணக்கில் உறங்கி விட்டது அந்தக் கேஸ் கட்டு.

பிறகு ஒரு நல்ல சுபயோக தினத்தில், உச்சநீதிமன்ற நீதிபதிகள் நல்ல மனோநிலையில் இருந்தபோது, சுந்தீப்தோ பந்தோபாத்யாயா, இந்த ‘ராஜாராம் ஷெட் ‘ கேஸ் பற்றி விவாதிக்க ஆரம்பிக்க, வழக்கின் ஆதியில் இருந்து வந்த பூர்வோத்திரங்களை விசாரித்த ப்ரானேஷ் சக்ரபோர்த்தி என்னும் அந்த நீதிபதி சிரித்துக் கொண்டே,

‘I think, nothing survives in this case’ ( ‘இவ்வழக்கில் எதுவுமே உயிரோடு இல்லை என நான் எண்ணுகிறேன்’ ) என்று திறந்த நீதிமன்றத்தில் கிண்டலான விமர்சனத்தை முன் வைக்க, அதைக் கேட்ட உச்சநீதிமன்றமே குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க, சிரிப்போடு சிரிப்பாக, வழக்கில் கோமுட்டி செட்டி டிரஸ்டுக்குச் சாதகமான தீர்ப்பை வழங்கி , அப்பீல் மனுவை ரத்து செய்து உத்தரவிட, அந்தத் தீர்ப்பு தில்லிக்கு நேர் கீழே தென் மூலையில் உள்ள ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ள முன்சீப் நீதிமன்றத்தை வந்து எட்டுவதற்கே ஆறு மாத காலம் பிடித்தது.

ராஜாராம் ஷெட் வழக்கின் பூர்வீகக் கதை, அதன் சாரம் என்று எதையுமே அவ்வூரில் நினைவில் வைத்துக் கொள்ளாதபடிக்கு நினைவுத்தடங்களிலும் முழு முற்றாய் அழிந்து போன தாவா வழக்கு மங்களம் பாடப்பட்டு, முடிவுக்கு வந்தது என்ற விஷயம் மாசிலாமணி ராஜாவுக்கும், அவரது பணிமனையின் காக்கிச் சீருடைப் பணியாளர்களிடமும் சொல்லப்பட்டது.

- ‘ராசா, இப்ப நாம என்ன பண்ணுறது ? கோர்ட் உத்தரவை எடுத்துக்கிட்டு யாராவது இங்க வருவாங்களே !’ என்றார் தலைமை மெக்கானிக்.

- ‘வந்தா நாம பாத்துக்குவோம். கவலை வேண்டாம். நீங்க பாட்டுக்கு ஓர்க்ஷாப் வேலைய விடாம ஓட்டிக்கிட்டே இருங்க !’ என்று தலைமை மெக்கானிக்கைத் தேற்றினார் மாசிலாமணி ராஜா.

ஒன்றரை மாதங்களுக்குப் பின்னர், ஒரு நாள் காலை, அந்த ராஜாராம் ஷெட்டுக்கு கோர்ட் அமீனா, குமாஸ்தாக்கள் மற்றும் இரண்டு வக்கீல்கள் வந்தார்கள். வந்தவர்களை தடபுடலாக வரவேற்று உபசரித்த மாசிலாமணி ராஜா, சுப்ரீம் கோர்ட் உத்திரவின்படி நிறைவேற்றுதல் மனு தயார் செய்யப்பட்டிருப்பதைப் படித்துப் பார்த்தார். வாசகங்கள் தெளிவாக இருந்தன.

- ‘சார், ஒரு பத்து நாள் மட்டும் டயம் கொடுங்க. இங்க ஏகப்பட்ட சாமான் இருக்கு. இதையெல்லாம் எடுத்து அப்புறப்படுத்தவே ஒரு வாரமாகும். நாங்களே வேற எங்கயாவது போயிடுறோம். அல்லது இராஜபாளையத்தில் எங்க பெரிய பஸ் டிப்போ இருக்கு. அங்க கொண்டு போயி இந்த சாமான்களை எல்லாம் தட்டிர்றோம். கொஞ்சம் பொறுத்துக்கோங்க’ என்று கால அவகாசம் கேட்டார் மாசிலாமணி ராஜா. உடன் இருந்த மெக்கானிக்குகள் திடுக்கிட்டு வாய் பேசாது நின்றனர்.

வாதியின் வக்கீல் அதை ஏற்றுக் கொள்ளவே, பத்து நாட்களுக்குள் ராஜாராம் ஷெட்டில் உள்ள சாமான்கள் அகற்றப்பட வேண்டும் என்றதோடு, அதை மேற்பார்வை பார்க்கும் பொறுப்பு வக்கீல் குமாஸ்தாவுக்குத் தரப்பட்டது.

பத்து நாட்களுக்குள் ஷெட்டில் இருந்த மலை போன்ற சாமான் குவியல் எங்கு போனதென்றே தெரியவில்லை. கனமான எ.்.கினால் ஆன கொட்டுவான், தட்டுவான், உலோக உபகரணங்கள் யாவும் இராஜபாளையத்துக்கு லாரியில் கொண்டு போகப்பட்டன.

நாற்பது அடி நீளத்தில் உள்ள ஷெட்டின் திறந்த வாயிலில் கனமான இரும்புத் தூண்கள் நடப்பட்டு, இரும்புக் கதவுகளால் மூடப்பட்டன. ஒரு பெரிய சைஸ் மஞ்சள் பூட்டு அதன் முகப்பில், கதவு நாதாங்கியிலிருந்து தொங்கியது. அந்த ராஜாராம் ஷெட்டில் பணி செய்த மெக்கானிக்குகள் ஒருவரைக் கூட வேலையை விட்டு விரட்டாமல், எல்லாரையும் தனது இராஜபாளையம் பஸ் டிப்போவுக்கு மாற்றம் செய்து, அவர்களது குடும்பங்களைக் காப்பாற்றினார் மாசிலாமணி ராஜா.

தொழுது வணங்கிட யாரும் இன்றி மோட்டார் முனியாண்டி சாமி, மழையிலும் வெய்யிலிலும் காய்ந்து கொண்டிருந்தார். அவருக்கு மாலை நேரத்தில் நெய் ஊற்றி விளக்குப் போட ஆள் இல்லை.

ரொம்ப மாதங்களுக்குப் பின்னர், பூஞ்சாரல் மழை பெய்து கொண்டிருந்த ஒரு மாலை வேளையில், வெளிநாட்டுக் கார் ஒன்று ராஜாராம் ஷெட் வாசலில் நின்றது. அதிலிருந்து இறங்கிய நால்வர், பளபளவென டாலடித்த சில்க் ஜிப்பா அணிந்திருந்தனர். அவர்கள் காதுகளில் வைடூரிய கடுக்கன்கள் டாலடித்தன. கழுத்தில் தேர் வடம் கனத்தில் தங்கச் சங்கிலி புரண்டது. உடலெங்கும் செல்வத்தின் அறிகுறி தான்.

கல் மண்டபத்தின் முகப்பைப் பார்த்த அவர்களில் ஒருவர்,

- 'வாப்பா, வந்து கதவைத் திறப்பா' என சத்தமிட்டார்.

- 'அய்யா, இதோ வர்றேங்க !'

காரிலிருந்து ஒரு பணியாள் ஓடி வந்து, இரும்புக் கதவின் பூட்டைச் சாவி போட்டுத் திறந்து அதன் கதவுகளை அகலத் திறந்தான். கதவு வழியே மண்டபத்திற்குள் பிரவேசித்த அவர்கள் மொத்த மண்டபத்தின் விஸ்தீரணத்தையும் பார்வையிட்டனர். பின்னர் வெளியே வந்தனர்.

அவர்களில் ஒருவன்,

- 'இந்தக் கல் மண்டபத்துக்காகவா நாப்பது வருஷம் கேஸ் நடந்துச்சு? ஒரு வெவஸ்தை வேணாம். வெட்டி வேலையத்தான் நம்ம தாத்தா பல வருஷமா செஞ்சுக்கிட்டு இருந்திருக்காரு' என்றான்.

- 'ஆமா, இன்னிக்கு இந்த இடத்து மதிப்பு எவ்வளவாம்? '

- 'அண்ணா, இந்த மண்டபத்தின் மனை இடம் மட்டும் ஆறரைக் கோடி ரூபாயாம். புதுக்கோர்ட்டு, காலேஜ், யுனிவர்சிட்டி எல்லாம் இந்த ஊருக்கு வந்த பெறகு, மனை விலை எல்லாம் கூடிப் போச்சாம். அதனால, இது இன்ன விலை போகும்னு வீடு புரோக்கர் ஒருத்தர் காலைல எங்கிட்ட வந்து பேசினாரு'.

-'ஆனா, இது நம்ம ஜாதியோட டிரஸ்ட் சொத்துப்பா. ஒருத்தரும் இதை விக்கவோ, கை வைக்கவோ முடியாது'.

- ஆனா, நம்ம தாத்தா இதுக்குன்னு ஒரு பெரும் போராட்டம் நடத்தியிருக்காரு. கோர்ட் கேஸ்னா சும்மாவா பின்ன?

பேசிக்கொண்டே அந்தப் பளபளத்த காரில் ஏறியவர்கள், தெற்கு ரத வீதி முனையில் திரும்பி, கீழ ரத வீதி வழியாக நகரை விட்டு வெளியேறினர். அவர்கள், அதற்குப் பிறகு, அந்த ராஜாராம் ஷெட் மண்டபத்திற்கு வரவே இல்லை.

பகல் முழுக்க மயான நிசப்தத்தில் இருக்கும் அந்த ஷெட்டில், இரவு நேரங்களில் இரும்பு அடிக்கும் சப்தம் கேட்கும் பிரமை ஏற்படுவதாக எதிரே

மோட்டார் முனியாண்டி கோவிலை ஒட்டி முடி வெட்டும் சலூன் கடை வைத்திருக்கும் செல்வம், தன்னிடம் வரும் வாடிக்கையாளர்களிடம் அடிக்கடி கூறிக் கொள்வதுண்டு.

------